# பேறிஞர் அண்ணாவின் நேர்காணல்கள்

# பேரறிஞர் அண்ணாவின் நேர்காணல்கள்

பேரறிஞர் அண்ணாவின் நேர்காணல்கள்

அண்ணாதுரை

மின்னூல் வெளியீடு : FreeTamilEbooks.com



அட்டைப்படம் - லெனின் குருசாமி - guruleninn@gmail.com

# இந்தியும் திராவிட நாடும்

(இந்தி நல்லெண்ணத் தூதுக்குழுவினருக்கு 11.10.1950 அன்று அண்ணா அளித்த பேட்டி)

சதுர்வேதி: எங்கள் தூதுக்குழு அரசியல் சார்பற்றது. சமாதானம், நட்பு ஆகியவைகளைப் பலப்படுத்தும் நோக்கத்துடனேயே வந்திருக்கிறோம். தாங்கள் இந்திமொழி பரவுதல் கூடாது எனக் கூறுவதாக கேள்விப்பட்டோம். இந்தி ஆரிய மொழி என்று தாங்கள் கூறுவதாகவும் அறிந்தோம். பல மொழிச் சேர்க்கையால் உருவான மொழியே இந்தியாகும் இதுவே பொது மொழியாக இருக்கும் நிலையிலிருப்பது என்று கருதுவதோடு, அவ்வாறு இருக்க அது அருகதையுள்ளது என்றும் உறுதியாக நம்புகிறோம். ஆனால் தாங்கள் அது கூடாது என எதிர்ப்பதாகவும் அதற்கு முக்கியக் காரணமாக இந்தி ஆரிய மொழி என்று கூறுவதாகவும் கேள்விப் பட்டோம். ஆகவே, இது பற்றிய தங்கள் கருத்துகளை அறிய விரும்புகிறோம்.

சி.என்.ஏ: மகிழ்ச்சி. ஆனால், துரதிர்ஷ்ட வசமாக, யார் என்னைப்பற்றித் தப்பாகப் பிரசாரம் செய்கிறார்களோ அவர்களையே நீங்கள் முதலில் சந்தித்திருக்கிறீர்கள்.

சதுர்வேதி: இல்லை. இல்லை. அப்படி நினைக்காதீர்கள்.

சி.என்.ஏ.: நாங்கள் அரசியல் காரணங்களுக்காக எதிர்ப்பதாகவும் பார்ப்பன துவேஷத்தால் எதிர்ப்பதாகவும் தங்களிடம் மாதவ மேனன் போன்றோர் தப்பாகக் கூறி இருக்கிறார்கள். ஆனால்இந்தி திணிக்கப்படவேண்டாம் என்று கூறுவதற்குப் பல காரணங்கள் உள்ளன. இந்தியா சுதந்திரம் அடைவதற்கு முன்னரே நாங்கள் இந்தியை எதிர்த்திருக்கிறோம். கட்டாய இந்தி கூடாது என்ற கிளர்ச்சி செய்திருக்கிறோம்.

தேசிய மொழியாக இருக்கவேண்டும் என்று இந்தியைப் புகுத்துபவர்கள் காரணம் சொல்கிறார்கள். அதைக் காட்டியே இராஜகோபாலாச்சாரியார் இந்தியைப் கொண்டுவந்தார். அப்போது நாங்கள் எதிர்த்தோம். பலன் பெற்றோம். அற்குள்ள காரணம் எங்கள் குழந்தைகள் தாய்மொழி தமிழ், அகில உலக மொழி ஆங்கிலம், இந்தி ஆகிய மூன்று மொழிகளைக் கற்க வேண்டியுள்ளது. இது கடினமாகும்.

அதோடு எங்கள் மொழி என்றால் எல்லோரும் போற்றும் ஒரு சிறந்த மொழி. இலக்கிய வளமும் சிறந்த அழகும் வாய்ந்தது. இன்னொரு மொழி கட்டாயமாக எம்மீது திணிக்கப்பட்டால், தனிப்பெருமை உடைய எங்கள் தாய்மொழி பின் தள்ளப்படும்.

இந்தி அழகுள்ளதல்ல. இலக்கிய வளங்கொண்டதல்ல என்று தங்கள் போன்றோரே ஒப்புக் கொண்டுள்ளீர்கள். ஆகவே, அத்தகைய ஒரு

மொழி, எங்கள்மீது ஏன் சுமத்தப்பட வேண்டும்?

எங்கள் எதிர்ப்புக்கு அரசியல் ரீதியுலும் காரணங்கள் உண்டு. இந்தி அரசாங்க மொழியாக வேண்டும் என்று நீங்கள் விரும்புகிறீர்கள். அதாவது இப்போது ஆங்கிலத்திற்கு இருக்கும் இடம் இந்திக்கு இருக்க வேண்டும் என்று கருதுகிறீர்கள். இதை எங்களால் ஒப்ப முடியாது.

இந்தி தேவை என்றால் வேண்டுபவர்கள் அதைக் கற்றுக் கொள்ள விரும்புவதில் எங்களுக்கு எதிர்ப்பில்லை. ஆனால், அது அரசாங்க மொழி என்று வலியுறுத்தப்படுவதில் வேறு பொருள் உள்ளது. இந்தியா ஒரே நாடு என்ற எண்ணத்திலேயே இந்தி மொழி ஆதரவாளர்கள் அரசியல் மொழியாக வேண்டும் என்று வலியுறுத்துகின்றனர்.

காஞ்சனலதா: அப்படி என்றால் இந்தியா ஒரு நாடில்லையா?

சி.என்.ஏ.: இல்லை சகோதரி! இந்தியா நாடல்ல. உபகண்டம். பல இனங்கள் வாழும் ஒரு பரந்த நிலப் பரப்பு. இங்கே ஒரே ஆட்சி நிலவுவது என்பது முடியாதது. அதேபோல, ஒரே மொழி அரசாங்க மொழி ஆவதும் இயலாது. இந்த இடத்தில் உங்களுக்கு ஒன்று கூற விரும்புகிறேன். வியாபார விஷயங்களுக்காகவோ வேறு எந்தவிதத் தொடர்புக்காகவோ இநதி வேண்டுமென்று கருதுபவர்கள் இந்தியைப் பயன்படுத்த எங்களுக்கு மறுப்பில்லை. ஆனால், அது அரசாங்க

மொழி (ஆட்சி மொழி) என்று கூறப்பட்டு, இந்த உப (துணை) கண்டத்திலுள்ள எல்லா மக்களும் கற்றுக் கொள்வது அவசியம் என்று வலியுறுத்தப்படுவதையே நாங்கள் ஒப்ப முடியாதது. இந்தியா ஒரு நாடல்ல. இந்த விஷயத்தில் அடிப்படையிலேயே நமக்குள் கருத்து வேற்றுமை இருக்கிறது.

சதுரவேதி: அதுபற்றி நாங்கள் தெளிவுபெற விளக்க முடியுமா? தாங்கள் திராவிடஸ்தான் கோருவதாகக் கேள்வியுற்றோம். அது சாத்தியமாகுமா? இந்தியாவைக் கூறுபோட்டு இரண்டாக்கிப் பாகிஸ்தான் என்ற ஒரு தனி நாட்டை உருவாக்கியதால் எவ்வளவு தொல்லையாக இருக்கிறது. பிரிவினையால் பொருளாதாரத் துறையில் நமது நாடு எவ்வளவு சங்கடப்படுகிறது. இதை எல்லாம் கவனிக்கும்போது, தனி நாடாகப் போவதிலுள்ள கஷ்டங்கள் விளங்கவில்லையா? இந்தியாவை ஆரிய வர்த்தம் என்றும் சீக்கிஸ்தான் என்றும் திராவிடஸ்தான் என்றும் பிரிப்பதால், இப்போது நாம் பாகிஸ்தானைப் பிரித்ததால் ஆளான கஷ்ட நஷ்டங்கள் உண்டாகாதா?

சி.என்.ஏ.: உண்மைதான். ஆனால், எங்கள் கோரிக்கை வேறுவிதமானது. பாகிஸ்தான், சீக்கிஸ்தான் போன்றதல்ல. ஏனெனில், பாகீ ஸ்தான் ஒரு புது படைப்பு. சீக்கிஸ்தான் ஒரு புதுக் கோரிக்கை. திராவிடஸ்தான் என்பது தனியாக இருந்த நாடு, இருக்கும் நாடு.

பாண்டே: அப்படி என்றால்?

சி.என்.ஏ.: நாங்கள் கோரும் திராவிடநாடு பூகோள நீதியிலும் சரித்திர ரீதியிலும் எப்போதும் தனியாகவே இருந்ததாகும். வட இந்தியாவைப் போன்றதல்ல. பெரிய பெரிய சாம்ராஜ்யங்கள் வடக்கே இருந்திருக்கின்றன. சந்திரகுப்தன், அக்பர், அவுரங்கசீப் போன்றோருடைய சாம்ராஜ்யங்கள் வடக்கில் இருந்திருக்கின்றன. அப்போதும் நாங்கள் கூறும் திராவிடநாடு, தென்னாடு - தனியாகத் தனி அரசுடனே இருந்ததாகும்.
பிரிட்டிஷார் இந்தியாவுக்கு வந்து, இந்திய நாட்டைத் தங்கள் வசப்படுத்திய பின்னரே இந்தியா உருவாயிற்று. நிர்வாக வசதிக்காகத் தென்னாடும் இணைக்கப்பட்டு டெல்லி ஆட்சி ஏற்பட்டது.
அதற்கு முன்னதாகத் தென்னாடு - தக்காணம் - ஒரு சுதந்திர நாடாகத்தான் இருந்தது.

சதுர்வேதி: தாங்கள் தனிநாடு கோருவதன் நோக்கம் என்ன?

சி.என்.ஏ.: எல்லா அதிகாரங்களும் எம்மிடமே இருக்கவேண்டும் என்பதுதான். இப்போது எதற்கெடுத்தாலும் டெல்லிக்குப்போக வேண்டி இருக்கிறது. அந்நிலை இல்லாமல், எங்களது வர்த்தகத்தை நாங்களே நடத்த உரிமை இருக்க வேண்டும். இதுபோன்ற எங்களது விவகாரங்களில் இன்னொருவர் தலையீடு இருக்கக் கூடாது எல்லாம் எங்களாலேயே கவனித்துக் கொள்ளப்படவேண்டும்.

பாண்டே: பொருளாதார ரீதியில் அது சாத்தியமா?

சி.என்.ஏ.: சாத்தியம்தான். எங்களை நாங்கள் ஆண்டு கொள்வதற்கான அத்துணை வசதிகளும் உள்ளன.

சதுர்வேதி: அதாவது, திராவிடஸ்தான் பொருளாதார வசதி நிறைந்த ஒரு தனிப்பகுதி என்று தெரிந்துகொண்டேன். அப்படித்தானே?

சி.என்.ஏ.: ஆமாம்!

சதுர்வேதி: அப்படி இருந்தாலும் இதுபற்றி என் சொந்தக் கருத்தைக் கூற விரும்புகிறேன். இரயில்வே, தபால் போக்குவதர்து போன்ற சில முக்கிய சாதனங்கள் பொதுவாக இருப்பததுதானே நல்லது. நான் பிரயாகையில் புறப்பட்டுக் கன்யாகுமரிக்கு வருகிறேன். பொதுவாக, ஒரே நிர்வாகத்திலிருந்தால். நான் நேராக வர முடியும். அப்படி இல்லை என்றால், ஒவ்வொரு பிரதேசத்தில் நுழையும் பொழுதும், இறங்கிப் பாஸ்போர்ட் போன்றவைகளைக் காண்பித்து விட்டுச் செல்ல வேண்டும். இதுபோன்ற கஷ்டங்கள் தபால் போக்குவரத்திலும் ஏற்படும். இது ஒரே நிரிவாகத்தில் இருந்தால் ஏற்படாது அல்லவா?

சி.என்.ஏ.: உண்மைதான். ஆனால், ஜெர்மனியிலிருந்து பிரான்ஸ், பிரான்ஸிலிருந்து இத்தாலி என்று செல்லும்போது, இறங்கிப்

‘பாஸ்போர்ட்’ காட்டவேண்டி இருக்கும் என்ற கஷ்டத்திற்காக ஐரோப்பிய மக்கள் எல்லாவற்றையும் ஒரே நிர்வாகத்தில் கொண்டுவர வேண்டும் என்றா விரும்புகிறார்கள்? பல நன்மைகளை நினைத்துத் தனிநாடு வேண்டுமெனக் கேட்டால், சில்லரைச் சங்கடங்களை ஏற்கத்தானே வேண்டும்.

காஞ்சனலதா: ஒரே உலகம் ஏற்படவேண்டும், உலகத்திற்கே ஒரு பொதுப் பாராளுமன்றம் ஏற்படவேண்டும் என்று எல்லாம் பேசப்படும் இந்தக் காலத்தில் ‘தனியாகப் போகிறேன்’ என்று கூறலாமா? ஒற்றுமையைக் குலைக்கலாமா? ஒரு குடும்பத்தில் வசிக்கும் ஒரு சகோதரர்கள் அல்லவா நாம்?

சி.என்.ஏ.: தங்கள் உவமானம் தவறு எனக் கூற வருந்துகிறேன். நாம் ஒரே குடும்பத்தில் வசிக்கும் சகோதர்கள் அல்ல. ஒரே வீட்டில் குடியிருக்கும் ஒரு நண்பர்கள். அதிலும் அழகான ஒரு தனிவீடு இருக்கும்போது, கட்டாயப்படுத்தி ஒரே வீட்டில் வைக்கப்பட்டிருக்கும் நண்பர்கள்.
உலக ஒற்றுமை பற்றிக் கூறினீர்கள். நாங்கள் தனிநாடாகப் பிரிவதால், உலகத்தோடு துண்டித்துக் கொள்ளமாட்டோம். உலக விவகாரங்களில் அக்கறை காட்டுவோம். வெளிநாட்டு விஷயங்களில் முழுமையுள்ள இந்தியக் கருத்து எப்படிச் செல்கிறதோ அப்படியே அதை ஒட்டி நாங்களும் இருப்போம்.

சதுர்வேதி: அதாவது, வெளிநாட்டு விவகாரங்களில் பொதுவாக இருந்து, இந்திய ஆட்சியினர் எடுக்கும் நடவடிக்கைகளோடு ஒத்துழைப்பீர்கள்.

காஞ்சனலதா: அது எப்படி இயலும்?

சி.என்.ஏ.: முடியும்! இப்போது உலக விவகாரங்களைக் கவனித்துக் கொள்ள ஐக்கிய நாடுகள் இல்லையா? அதைப் போல இந்திய உபகண்ட முழுமைக்கும், நாம் ஒரு சபையை ஏற்படுத்திக்கொண்டு, வெளிநாட்டு விவகாரங்கள் பற்றிய பொதுக் கொள்கையை நிர்ணயத்துக் கொள்ளலாம்.

காஞ்சனலதா: வெளிநாட்டு விவகாரம் தவிர்த்து ஏனைய பொறப்புகளும் அதிகாரங்களும் உங்கள் வசமே இருக்கவேண்டும என்று விரும்புகிறீர்கள். இதை மத்திய சர்க்காரிடம் தெரிவித்து உங்கள் அதிகாரங்களைப் பெருக்கிக் கொள்ளலாமே? உங்கள் மாகாணத்திற்கு அதிக அதிகாரங்கள் வேண்டுமெனக் கோரி, அவைக் சர்க்காரால் மறுக்கப்பட்டால், அப்போது நீங்கள் பிரிவினை குறித்துப் பேசலாம் அல்லவா? இப்போது இந்திய சர்க்காருடன் இணைந்திருப்பதால் எவ்வளவு நன்மைகள் இருக்கின்றன?

சி.என்.ஏ.: நன்மைகள் எவையும் இல்லை. தாங்கள் சொல்வதெல்லாம் நாங்கள் கேட்டுச் சலித்துப் போனவை.

பாண்டே: ஆந்திரா, கேரளம், கர்நாடகம், தமிழகம் ஆகியவை திராவிடஸ்தானில் அடங்கி இருக்கவேண்டும் என்று கூறுகிறீர்கள். அது எப்படி?

சி.என்.ஏ.: அந்தப் பிரதேசங்களில் வாழ்வோர் இனவாரியாகப் பார்த்தால் திராவிடர்கள்.

ஆப்டே: அப்படி என்றால் மகாராஸ்டிரம்? அங்கும் திராவிடர்கள் இருக்கிறார்கள். பஞ்ச திராவிடர் என்று கூறப்படுகிறார்கள்.

சி.என்.ஏ.: ஆமாம். அவர்களே விரும்பினால் தனிநாடு அமைத்துக்கொள்ள வேண்டியதுதான்.

காஞ்சனலதா: வங்காளம்?

சி.என்.ஏ.: அவர்கள் விரும்பினால்.

காஞ்சனலதா: இப்படியே பிரிந்துகொண்டே போனால்....

சி.என்.ஏ.: ஏன் விதர்ப்பம் போன்று 42 ராஜ்யங்கள் இருந்திருக்கின்றனவே!

இராகவதாஸ்: அதுசரி. மொழிவாரி மாகாணங்கள் பிரிக்கப்பட வேண்டும் எனக் கூறப்படுகிறதே!

சி.என்.ஏ.: அது நிரிவாகம் சுலபமாக இருப்பதற்குத்தான். நாங்கள் கூறும் வகையில் அல்ல.

இராகவதாஸ்: தாங்கள் திராவிடஸ்தானில் ஆந்திரம், கேரளம், கர்நாடகம் ஆகியவைகளின் பொது மொழி என்ன?

சி.என்.ஏ.: ஆந்திரத்தால் தெலுங்கு, கர்நாடகத்தில் கன்னடம், கேரளத்தில் மலையாளம் முறையே அவர்கள் சொந்த மொழியாக இருக்கும். கூட்டு ஆட்சிமொழியாக சர்வதேச மொழிகவும் (Federal and International) ஆங்கிலம் இருக்கலாம்.

இராகவதாஸ்: ஆங்கிலம் படித்தவர்கள் எத்தனை பேர்?

சி.என்.ஏ.: 10% அல்லது 20% இருக்கலாம்.

காஞ்சனலதா: அதாவது, வட்டார மொழி அறிந்தவர்களைவிடக் குறைவு.

இராகவதாஸ்: உதாரணமாக, நான் ஒரு சாதாரண குடிமகன். எனக்கு ஆங்கிலம் தெரியாது. அப்படியானால் உங்கள் பாராளுமன்றத்தில் எனக்கு இடம் கிடையாது!

சி.என்.ஏ.: மன்னிக்க வேண்டும். வட்டார மொழி அறிந்தவர்கள் சட்டசபை போகத் தடை இல்லை. அந்தந்தப் பகுதியில் அந்தந்த

வட்டார மொழிதான் அரசியல் மொழியாக (ஆட்சி மொழியாக) இருக்கும்.

இராகவதாஸ்: அப்படியானால், ஆங்கிலம்?

சி.என்.ஏ.: அகில உலகத் தொடர்புக்கும் கூட்டாட்சி விவகாரங்களுக்கும் அது பயன்படும் என்று குறிப்பிட்டேன்.

இராகவதாஸ்: பொது ஜனமாகிய எனக்கு உலகம் வேண்டியதில்லை! நீங்கள் என்னைப் போன்றவருக்கும் சர்க்காருக்கும் இடையிலிருந்து மொழி பெயர்ப்பு வேலை செய்பவர்களாக ஆவீர்கள்!

சி.என்.ஏ.: ஒரு ஜனநாயக ஆட்சியில் பொது ஜனம் கட்டிப் பொருளல்ல. ஜனநாயகத்தின் உயர்நோக்கமே அவர்களை முன்னேற்றுவதுதானே! ஆகவே, அறியாமை அதிக நாட்கள் நீடிக்க வேண்டுமா? பொதுஜனம் எப்பொழுதுமே பொதுஜனமாகவே இருக்கவேண்டும் என்பது தங்கள் விருப்பமா?

சதுர்வேதி: பார்ப்பனர், பார்ப்பனர் அல்லாதார் பற்றிய தங்கள் கருத்தென்ன?

சி.என்.ஏ.: இங்குள்ள பார்ப்பனர் - பார்ப்பனர் அல்லாதார் பிரச்சினை வேறு. வடநாட்டிலுள்ள இந்து முஸ்லீம் விஷயம் வேறு.

பார்ப்பனர் தங்களை உயர்ந்தவர் என்று கருதுகிறார்கள். சமுதாயத்தில் அவர்கள் செல்வாக்கு அதிகம். ஆகவே, அரசியலிலும் பொருளாதாரத்திலும் அவர்களுக்கே செல்வாக்கு இருக்கிறது.

சதுர்வேதி: இந்தப் பிரச்சினை தீர வழி இல்லையா?

சி.என்.ஏ.: இன்னும் ஐந்து ஆண்டுகளில் தீர்ந்துவிடலாம்.

காஞ்சனலதா: அதெப்படி? அவ்வளவு சரியாகச் சொல்கிறீர்கள்.

சி.என்.ஏ.: சகோதரி! இது எங்கள் ஆசையைக் காட்டுகிறது. இப்போதே முக்கியப் பார்ப்பனத் தலைவர்கள் இப்பிரச்சினை முடிவு காட்டப்படவேண்டும் என்று விரும்புகிறார்கள்.

இராகவதாஸ்: திராவிடநாட்டில் பார்ப்பனர்கள் நிலை என்ன?

சி.என்.ஏ.: மனித உரிமையோடு வாழ்வார்கள். அவர்களை விரட்டுவதல்ல எங்கள் நோக்கம்.

பாண்டே: பார்ப்பனத் தலைவர்கள் இங்குள்ள இந்தப் பிரச்சினையைத் தீர்க்க முயலவில்லையா?

சி.என்.ஏ.: முயன்றிருந்தால் பிரச்சினை வெகு சீக்கிரம் முடிந்திருக்கும். உதாரணத்துக்குச் சொல்கிறேன். இந்த 1950 -ல் கூட, எங்களால் பார்ப்பனர் வசிக்கும் அக்கிரகாரத்தில் ஒரு வீடு வாங்க

முடியாது. அது மட்டுமல்ல, கோயிலிருக்கிறது. அங்கு எங்களால் பூசை முதலாய காரியங்களை அவர்கள் மூலந்தான் செய்ய வேண்டியிருக்கிறது. எங்களால் செய்ய முடிவதில்லை. அதேபோலத்தான் எங்கள் சடங்குகளும்.

காஞ்சனலதா: ஐரோப்பாவில்கூட மதகுருமார் இருக்கத்தான் செய்கிறார்கள்!

சி.என்.ஏ.: அங்கு யாரும் மதகுருவாகலாம். அதேபோல இங்கு நான் விரும்பினால் அப்துல் லத்தீப் ஆகிவிடலாம். ஆனால் அனந்தாச்சாரி ஆக முடியாது. எவ்வளவு வேதசாத்திரங்களைக் கற்றாலும், இங்கு நான் புரோகிதர் ஆக முடியாது.

காஞ்சனலதா: உண்மைதான் இதே நிலைதான் வடநாட்டிலும் இருக்கிறது.

சி.என்.ஏ.: நீங்கள் அதை உணரவில்லை.

இராகவதாஸ்: தனிப்பட்ட பிராமணர்கள் இந்த விஷயத்தில் சிரத்தை எடுத்துக் கொள்ளவில்லையா?

சி.என்.ஏ.: எடுத்துக்கொண்டார்கள். அது அவர்களுடனேயே நின்றுவிட்டது. உதாரணமாக இராஜகோபாலாச்சாரியார் போன்றவர்கள், தங்களைப் பொறுத்தவரையில்

சீர்திருத்தவாதிகள்தான். ஆனால் அவர்கள் சீர்திருத்தம் அவர்களுடைனேயே நின்றுவிட்டது. தங்களைச் சேர்ந்தோரையும் தங்களைப் போல ஆக்கத் தவறிவிட்டார்கள்.

சதுர்வேதி: மனிதாபிமானம் நிறைந்தோர் இக் கொடுமைகள் ஒழிய வேண்டும் என்றே விரும்புவர். சமுதாய நீதி கிடைக்கவேண்டும் என்பதை யாரும் மறுக்க முடியாது. இதற்கு மகாத்மா காந்தியின் தத்துவமே போதுமே! பிரிவினயா கேட்க வேண்டும்.

சி.என்.ஏ.: காந்தியார் நல்ல தத்துவம் தந்தார். ஆனால், இங்குள்ளோர் தங்களுக்கேற்ற வகையில் அதைத் திரித்துக் கொண்டனரே!
இராம ராஜ்யமாக நாடு இருக்கவேண்டும், அது நல்ல நாடாக இருக்கவேண்டும என்னும் பொருளில் சொன்னார். ஆனால், அதைப் பரப்பும் வசதி கொண்டவர்களோ இராம இராஜ்யம் என்றால், இந்து ராஜ்யம், அதாவது வருணாசிரம தர்மம் இருக்கவேண்டும், நாலு சாதிகள் இருக்கவேண்டும் என்றல்லவா திரித்துப் பேசுகிறார்கள்.

சதுர்வேதி: உண்மைதான்.

சி.என்.ஏ.: காந்தியார் தங்கத்தைத் தந்தார். ஆனால், அதைத் தங்கள் இஷ்டத்திற்கேற்றவாறு நகைகளாகச் செய்துகொண்டனர்

அவரது சகாக்கள். ஆனால், இங்குள்ளோரோ அதைக் கொண்டு விலங்கைச் செய்து எங்கள் கைகளில் அல்லவா பூட்டி இருக்கிறார்கள்.

சதுரவேதி: டெல்லியில் கூட மதராசிகள் (சென்னையைச் சார்ந்தவர்கள்) என்றால் வெறுப்பு இருக்கிறது. எல்லா உத்யோகங்களையும் அவர்களே பிடித்துக் கொள்வதாக ஓர் அதிருப்தி உலவுகிறது. பிரிவினை ஏற்பட்டால் அவர்கள் பலாத்காரத்தோடு வெளியேற்றப்படலாம் அல்லவா?

சி.என்.ஏ.: அதை நாங்கள் எதிர்பார்க்கிறோம். நாட்டுப் பிரிவினை என்றால் இவைகளை எல்லாம் எதிர்பார்க்கத்தானே வேண்டும்.

மேலும் தொடர்ந்து பல கேள்விகளுக்குப் பொதுச்செயலாளர் பதில் அளித்தார். அவற்றின் சுருக்கமாவது: திராவிட நாட்டில் அயல் நாட்டாருக்குள்ள உரிமைகள், பார்பனர் பார்பனலல்லாதார் பிரச்சினை எவ்வளவு விரைவில் முடிவடைகிறதோ அவ்வளவு விரைவில் தீர்வும் கிடைக்க வழி உண்டு. ஏனெனில், இப்போது இந்த வேற்றுமை ஒழிய வேண்டும் என்பதில் பார்ப்பனத் தலைவர்களும் அக்கறை காட்டி வருகிறார்கள். இது வளருமானால் இந்து போன்ற பத்திரிகைகள் எங்கள் கோரிக்கையை விளக்கலாம். நாங்கள் பாகிஸ்தானுக்கு முன்பிருந்தே தனிநாடு கோருகிறோம். அனால், வடநாட்டிலிருக்கும் உங்களுக்கு வேண்டிய அளவுக்கு எங்கள் கோரிக்கை விளக்கம் பெறவில்லை. காரணம் ஆங்கிலப்

பத்திரிகைகள் அவர்கள் வசமிருப்பதால், இப்பிரச்சினையை எடுத்துச் சொல்லவில்லை.

(இறுதியாக எல்லோரும் விடைபெற்றுக் கொள்கையில், ‘தாங்கள் ஒய்வு கிடைக்கும்பொழுது வடநாடு வரவேண்டும்’ என்று அழைத்தார்கள்.

‘நான் முன்பே வந்திருக்கிறேன். ஓய்வு கிடைக்கும்போது கட்டாயம் வருகிறேன்’ என்று பொதுச்செயலாளர் கூறினார்.

‘நமது நட்பு வளர வேண்டும். நாங்கள் அரசியல்வாதிகள் அல்ல. சொந்த முறையில் கூறுகிறோம்’ என்று கூறிச் சென்றனர் தூதுக் குழுவினர்.

இந்தி நல்லெண்ணத் தூதுக்குழுவினருக்கு 11.10.1950 அன்று அண்ணா அளித்த பேட்டி இது. தூதுக் குழுவில் பின்வருவோர் இருந்தனர்.

1. சந்திரபள்ளி பாண்டே, இந்தி சாகித்ய சம்மேளத் தலைவர், அலகாபாத்.
2. தோழியர் முதல்வர் காஞ்சனலதா, சபர் மாலா, மகிள வித்யாலயா, லக்னோ
3. பாபா இராகவதாஸ், ஐக்கிய மகாண சட்ட சபை உறுப்பினர்.

4. பண்டிட் சீதாராம் சதுர்வேதி, காசி இந்துப் பல்கலைக் கழகம்.

5. பால்சந்திரா ஆப்டே, தலைவர், தட்சிணப் பாரத இந்திப் பிரச்சார சாலை, சென்னை

6. சந்திர காந்தர், காசி-ராணி கல்லூரி உணவு விடுதி சார்ந்தவர், இவர் குழுவின் தனிச் செயலர்.

10.10.1950 அன்று குழுவின் தனிச் செயலர் அண்ணாவின் அனுமதி பெற, 11.10.1950 அன்று பேட்டி திராவிடநாடு அலுவலகத்தில் நடைபெற்றது.

பேட்டி கண்ட நாள் 11.10.1950

மூலம்: திராவிடநாடு 15.10.1950, 22.10.1950

# திராவிட அரசு

(நாஞ்சில் மாவட்ட முதல் மாநாட்டில் கலந்து கொள்ளச் சென்றிருந்த அண்ணாவை மளையாளப் பகுதியைச் சார்ந்த பத்திரிகை நிருபர்கள் 12 பேர் 31.12.1950 அன்று பேட்டி கண்டது)

நிரு: தங்கள் இயக்கத்தின் முக்கியக் குறிக்கோள்கள் என்ன?

பொ.செ: சமுதாயத் துறையில் சாதி, மத பேதங்களை ஒழிப்பதும், பொருளாதார நிலையில் சுரண்டல் ஒழியப் பொருளாதாரச் சமத்துவ நிலை ஏற்படுத்துவதும், அரசியலில் வடநாட்டுப் பிரிவினையிலிருந்து திராவிடத்தைப் பிரிப்பதுமாகும்.

நிரு: அகில உலக ஒற்றுமையில் (internationalism) உங்களுக்கு அக்கறை இல்லையா?

பொ.செ: பல தேசத் தோழர்களின் கூட்டு முன்னணிதானே அது?

நிரு: பின், திராவிட நாடு கேட்கிறீர்களே! பிரிவினையை அல்லவா வற்புறுத்துகிறீர்கள்?

பொ.செ: பிரிக்கச் சொல்கிறோம், இந்திய மத்திய தொடர்பிலிருந்து.

நிரு: இந்தியாவின் ஒரு பகுதிதானே, தாங்கள் கூறும் திராவிட நாடு?

பொ.செ: இல்லை. அது தனிநாடு, இந்தியாவின் பகுதியல்ல. இந்தியாவின் பகுதி என்று கூறிடுவதை நாங்கள் மறுக்கிறோம்.

நிரு: இந்தியாவிலிருந்து பிரிகிற நீங்கள் எப்படி அகில உலக ஒற்றுமையை ஏற்றவராவீர்?

பொ.செ: திராவிட நாட்டை, அகில உலக நாடுகளில் ஒன்றாக்கவே நாங்கள் பாடுபடுகிறோம்.

நிரு: திராவிட நாட்டைப் பற்றி இன்னும் சற்றுத் தெளிவாக விளக்குவீர்களா?

பொ.செ: தாராளமாக. திராவிட நாடு புதிதாகக் கேட்பதல்ல. ஏற்கனவே எங்களுக்குச் சொந்ததமாக இருந்த நாடு வெள்ளையர் ஆட்சியிலேதான் ஒரு பிணைப்புக்குள் சிக்கிக் கொண்டது. நாங்கள் இழந்த நாடு திராவிட நாடு. இழந்ததை மீண்டும் பெறும் உரிமை எமக்குண்டு.

நிரு: உங்கள் போராட்டத்திற்கு இந்தியச் சட்டம் இடந்தருமா?

பொ.செ: இந்திய அரசியல் சட்டத்தையே மாற்றியமைக்கவேண்டும் என்பது எங்கள் அவா. இந்தியச் சட்டத்தைத் திருத்தியமைத்து மாகாண சர்க்காரிடமே எல்லா அதிகாரங்களையும் இருக்கச் செய்ய வேண்டும் என்பதே எங்கள் நோக்கம்.

நிரு: டெல்லிதானே உங்கள் பிரதிநிதி! அதனிடம் தெரிவிப்பதுதானே முறை.

பொ.செ: முதலில் திராவிட மக்களை அதற்குத் தயாராக்க வேண்டாமா? அதைத்தான் இப்போது செய்கிறோம்.

நிரு: திராவிடநாடு என்பது பிரிவினை கோரிக்கைதானே? டெல்லியிடம் சொல்லித்தானே பெற முடியும்?

பொ.செ: திராவிடஸ்தான் இயக்கத்தைச் சற்றுத் தெளிவாகத் தாங்கள் புரிந்து கொள்ளவேண்டும்.

நிரு: திராவிடஸ்தான் என்று கேட்பது பாகிஸ்தான் போலத்தானே? அதில் ஒன்றும் தவறில்லையே.

பொ.செ: அந்த வகையில் சரிதான். காப்பியடிக்கிறோம் என்று கூறுவது தவறு. உதாரணமாகச் சொல்கிறேன். இந்தியாவில் பல வீடுகள் உள்ளன. இந்திய யூனியன் என்னும் சுற்றுமதில் இருந்தது.

பாகிஸ்தான் வீட்டிற்குத் தனி மதிலும் வாயிற்படியும் அமைத்தது போலத் திராவிடஸ்தான் வீட்டிற்கும் வேண்டும் என்கிறேன்.

நிரு: வெளிநாட்டுப் படை எடுப்பு வந்தால்?

பொ.செ: அத்தகைய விருப்பத்தகாத நிலைகளை ஏன் கற்பனை செய்து கொள்ள வேண்டும்?

நிரு: பக்கத்து நாடுகளின் ஒத்துழைப்பு கிடைக்குமா?

பொ.செ: கிடைக்கும். ஆனால், திராவிட நாட்டின் எல்லைக்குள்ளேயே எங்கள் சொல்லுக்கு ஆதரவு திரட்டுகிறோம். வெளி நிலைகளைப்பற்றி இப்பொழுது யோசிக்க நேரமில்லை. அவசியமுமில்லை.

நிரு: திராவிடஸ்தானில் கேரளத்தின் நிலை என்ன?

பொ.செ: திராவிடக் கூட்டாட்சியில் அது ஓர் அங்கம் வகிக்கும். மலையாளிகளையும் மற்றவர்களையும் ஆட்டிப்படைக்கத் தமிழர்கள் செய்யும் சூழ்ச்சியே திராவிடஸ்தான் இயக்கம் என்று வேண்டுமென்றே சிலர் கூறுவது தவறு.

நிரு: அப்படியானால்...

பொ.செ: திராவிடஸ்தான் ஒரு கூட்டாட்சி. அதில் தமிழகம், ஆந்திரம், கேரளம், கன்னடம் ஆகிய பகுதிகள் அடங்கி இருக்கும். அதற்குத் தனித்தனியே சட்ட சபைகள், சுதந்திர வாழ்க்கை, சுய நிர்ணய உரிமை எல்லாம் உண்டு. அங்கங்கே அந்தந்த வட்டார மொழியே ஆட்சி மொழியாக விளங்கும் அகில உலகத் தொடர்பிற்கும் கூட்டாட்சி முறைக்கும் ஆங்கிலமே ஏற்ற மொழி எனக் கருதுகிறோம்.

நிரு: நாஞ்சில் நாட்டின் நிலை என்ன?

பொ.செ: நாஞ்சில் தமிழகத்துடன் சேரும். இன்றும் திருவாங்கூரின் அரசியல் வாழ்வுச் சிக்கல்களைப் பற்றிய முழு உண்மைகள் கிடைக்கப் பெற்றவுடன் இன்னம் தெளிவான விளக்கங்கள் தர இயலும்.

நிரு: இமயம் இருக்கிறது. இந்தியாவின் பாதுகாப்பு எல்லையாக. அதுபோலத் திராவிடத்திற்கில்லையே!

பொ.செ: விந்தியமிருக்கிறது என்று உடனே சொல்லலாம். ஆனால் ஒரு நாட்டிற்கு மலைதான் எல்லையாக முடியும் என்பது சரியல்ல. பிரான்சு, அயர்லாந்து முதலியவை மலை எல்லையாக இல்லாத நாடுகளே.

நிரு: வட மொழிக்கு ஆதரவு அதிகமாக இருப்பதாகச் சொல்லப்படுகிறதே?

பொ.செ: அப்படி ஒன்றும் இல்லை. எங்கும் எதிர்ப்பு எண்ணம் பரவிக் கொண்டே இருக்கிறது. உதாரணமாக, ஆந்திர நாட்டில் வடமொழிக்கு எதிர்ப்பு இயக்கம் இருந்து வருகிறது. மலையாளம், தெலுங்கு, கன்னடம் எல்லாம் வடமொழியால் வாழ்விழந்தவைதான்.

நிரு: நீங்கள் எப்படித் திராவிடஸ்தான் இயக்கத்தைப் பரப்ப முயற்சி செய்வீர்கள்?

பொ.செ: பொதுமக்களிடம் திராவிட நாட்டுப் பிரிவினையைப் பற்றிப் பிரச்சாரம் செய்கிறோம். தமிழ்நாட்டு எதிர்ப்புணர்ச்சியை வடநாட்டு மந்திரிகளுக்கு கறுப்புக்கொடி மூலம் காட்டல், வடநாட்டுச் சுரண்டல் முறைகளைத் தடுக்க அடையாள மறியல் செய்தல் போன்றவைகள் வாயிலாக டெல்லி ஏகாதிபத்யத்திற்கும் எங்கள் கோரிக்கைகளை எடுத்துச் சொல்லி வருகிறோம்.

நிரு: உங்கள் கழகத்தின் சட்டதிட்டங்களை அறிய விரும்புகிறோம்.

பொ.செ: மாகாண மாநாட்டில்தான் அவை முழு உருவடையப் போகின்றன. இப்பொழுது பொதுச் செயலாளர் ஒருவர் தலைமையில் பல்வேறு குழுக்கள் வேலை செய்து வருகின்றன.

நிரு: நாகர்கோயில் மாநாடு என்றால் அது கேரள மாநாடு என்ற சொல்கிறார்களே! இது சரியா?

பொ.செ: நாஞ்சில் - கேரளத்தின் நுழைவாயில் எனினும் அது தமிழகத்தைச் சேர்ந்த மாவட்டமே.

நிரு: ஆரியர்கள் உங்கள் ஆட்சியில் எந்நிலை பெறுவார்கள்?

பொ.செ: பிரிவினை ஆட்சியை ஒத்துக்கொண்டவர்கள் எல்லாரும் நிம்மதியாக இருப்பர்.

நிரு: உங்கள் ஆட்சியில் விசுவாசம் கொண்டு அவர்கள் இருந்தால்…

பொ.செ: விசுவாசத்தோடு இருந்து. திட்டங்களை மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டால், எவரும் திராவிட அரசியலே குடிமக்கள் ஆகிவிடலாம்.

(நாஞ்சில் மாவட்ட முதல் மாநாட்டில் கலந்து கொள்ளச் சென்றிருந்த அண்ணாவை மளையாளப் பகுதியைச் சார்ந்த பத்திரிகை நிருபர்கள் 12 பேர் 31.12.1950 அன்று பேட்டி கண்டனர். மாநாட்டு வரவேற்புக் குழு இப்பேட்டிக்கு ஏற்பாடு செய்தது. இப்பேட்டியில் கலந்து கொண்டவர்களின் இதழ்கள் பின்வருமாறு:

கேரள கௌமதி

தேசபந்து

மலையாளி

தட்சணபாரதி

தென்குரல்

தென் திலகம்

வஞ்சிநாடு

தேவி

நண்பன்

ராஷ்டிரவேலி

மலையாள ராஜ்யம்

தியாக நாடு

திரு.வி.தாஸ் சட்டமன்ற உறுப்பினரும், சென்னை லிபரேட்டர் நிருபரும் உடன் இருந்தனர்.)

பேட்டி கண்ட நாள்: 31-12-1950
மூலம்: திராவிட நாடு, 28.01.1951

பொ.செ: - பொதுச்செயலாளர் அண்ணா

# பாபா - அண்ணா உரையாடல்

(13.07.1968 அன்று பெங்களூரில் செய்தியாளர்களுக்கு அண்ணா அளித்த பேட்டி)

பாபா: சொல்லுங்கோ (தமிழில் சொன்னார்)

அண்ணா: (தமிழில் பேசியது கண்டு சிரித்தார்)

பாபா: (ஜெகந்நாதன் அவர்களைப் பார்த்து) எங்கே வசிக்கின்றார்?

ஜெகந்நாதன்: காஞ்சியில் வசிக்கிறார். சர்வோதய சம்மேளனத்தின் பொழுது திருச்சியில் அவரது இயக்க மாநில மாநாடு நடைபெற்றதால் சம்மேளனத்திற்கு வர இயலாது போய்விட்டது. அவருடைய கழக ரீதியான ஆதரவு பூமிதான இயக்கத்திற்கு வேண்டுமென்று அவரிடம் கேட்டிருக்கிறேன்.

அண்ணா: பல இடங்களில் எங்கள் இயக்க ஊழியர்கள் தனிப்பட்ட முறையில் பூமிதான் இயக்கத்தில் பணி செய்கிறார்கள்.

பாபா: உங்கள் கழகம் பூமிதான இயக்கத்தில் ஈடுபடலாமல்லவா?

அண்ணா: நாங்கள் கழக ரீதியாக பூமிதான இயக்கத்தில் பங்கெடுத்துக்கொண்டால் வேறு சில கட்சிகளுக்கு வருத்தமேற்படும்.

பாபா: அப்படியானால் உங்கள் கட்சியில் நான் சேர வேண்டுமென்றால் என்னென்ன செய்யவேண்டும்?

அண்ணா: எங்கள் கழகம் அகில இந்திய ரீதியில் நடைபெற வில்லை. குறிப்பிட்ட பிராந்தியத்தில் தானே நடைபெறுகிறது.

பாபா: வேறு மாகாணத்தினர் உங்கள் இயக்கத்தில் ஈடுபடக் கூடாது என்ற நியதியா?

அண்ணா: இல்லை தமிழர்கள் அதிகமாக இருப்பதால் தமிழர்கள் தான் எங்கள் கழகத்தில் அதிகம் சேர்ந்திருக்கிறார்கள்.

பாபா: ஆந்திரர், கன்னடத்தார், கேரளத்தார் சேரலாமல்லவா?

அண்ணா: நிச்சயமாகச் சேரலாம். திராவிடர் என்ற அடிப்படையில் இவர்கள் எல்லோரும் சேரலாம். அதுதான் எங்கள் கழகத்தின் எண்ணமும்கூட.

பாபா: ஹிந்துக்கள், இஸ்லாமியர் என்ற வேற்றுமையுண்டா?

அண்ணா: இல்லை. ஹிந்துக்கள், இஸ்லாமியர் என்றோ பார்ப்பனர், பார்ப்பனரல்லாதார் என்றோ எந்தவிதமான வேற்றுமையும் எங்கள் கழகத்திற்குக் கிடையாது. எல்லோரும் சேரலாம்.

திராவிட நாடு:

பாபா: உங்களுடைய கொள்கையைப் பற்றிக் கூறுங்கள்.

அண்ணா: மத்திய அரசாங்கத்திடம் இன்று எல்லா அதிகாரங்களும் குவிந்திருக்கின்றன. மாகாண அரசாங்கங்களுக்கு எந்தவிதமான அதிகாரமும் கிடையாது. ஆதலால் ஆந்திரமும், கேரளமும், கன்னடமும், தமிழகமும் மொழிவழி பிரிந்து இனவழி ஒன்றுபட்ட திராவிடக் கூட்டு ஆட்சி அமைப்பது எங்கள் கொள்கை.

பாபா: மண்டலவாரி ராஜ்ய அமைப்பிற்கும் திராவிடநாடு பிரிவினைக்கும் என்ன வேறுபாடு இருக்கிறது?

அண்ணா: மண்டலவாரி ராஜ்ய அமைப்பு என்பது வெறும் ஆலோசனைக்குழுவே ஆனால் நாங்கள் தனி நாடு வேண்டுமென்கிறோம்.

பாபா: ஆந்திர மாகாணத்தில் என்னுடைய 7 மாத சுற்றுப் பிரயாண அனுபவத்திலிருந்து ஆந்திரர்கள் தமிழர்களோடு சேர்ந்துவாழப் பிரியமில்லாமல் இருக்கிறார்கள் என்றுதான்

எண்ணுகிறேன். ஆந்திரர்கள் தனித்துவாழவே ஆசைப்படு கின்றார்கள்.

அண்ணா: 6,7 வருடங்களாக ஆந்திரர்கள் தமிழர்கள் தங்கள் கையில் எல்லா அதிகாரங்களையும் வைத்துக் கொண்டு தங்களைப் புறக்கணிக்கிறார்கள் என்ற எண்ணம் கொண்டிருந்தனர். பாபா அவர்கள், ஆந்திரர்கள் தமிழர்கள் மீது இந்தத் தவறான எண்ணத்தினால் அதிக வெறுப்புக் கொண்டிருந்த நேரத்தில் சுற்றுப்பிரயாணம் செய்ததால் அவ்வாறு கூறுகிறாரென்று எண்ணுகிறேன்.

பாபா: தமிழர்கள் மீது ஆந்திரர்கள் அதிக வெறுப்புக் கொண்டிருக்கிறார்கள் என்று கூறவில்லை. அவர்கள் தனி மாகாணமாக தனித்து வாழவே விரும்புகின்றார்கள்.

அண்ணா: ஆந்திரமும் கேரளமும் கன்னடமும் தமிழகமும் தனித்தனி மாகாணமாக அமைந்த ஓர் திராவிடக் கூட்டாட்சியைத் தானே நாங்களும் விரும்புகிறோம்.

அண்ணா: ஆந்திரமும் கேரளமும், கன்னடமும் தமிழகமும் தனித்தனி மாகாணமாக அமைந்த ஓர் திராவிடக் கூட்டாட்சியைத் தானே நாங்களும் விரும்புகிறோம்.

பாபா: அப்படியானால் வருங்காலத்தில் நடைபெறலாம். தட்சிணப்பிரதேசத்திற்கும், திராவிட நாட்டிற்குமுள்ள வேறுபாடு என்ன?

அண்ணா: திராவிடநாடு மத்திய அரசாங்கத் தொடர்பிலிருந்து தனித்து இயங்கும். தட்சிணப் பிரதேசம் மத்திய அரசாங்கத்திற்குக் கட்டுப்பட்டதாகவே இருக்கும்.

பாபா: உங்கள் திராவிட நாட்டில் “பார்லிமெண்ட்” இருக்குமா?

அண்ணா: பார்லிமெண்ட் இருந்தாலும் அதிகாரம் முழுமையும் மாகாண அரசாங்கங்களின் கையில்தான் இருக்கும். வெளிநாட்டுத் தொடர்பு போன்ற சில காரியங்களே அவைகளின் கையிலிருக்கும். இன்றைய அரசியல் சட்டம்கூட தனியாகப் பிரிந்து செல்வதற்கு அனுமதியளிக்கின்றது.

பாபா: படை வைத்திருப்பீர்களா?

அண்ணா: வைத்திருப்போம்.

பாபா: அப்படியானால் திராவிட நாட்டுக் கற்பனை பாகிஸ்தானின் அமைப்பை ஒத்திருக்கிறது.

அண்ணா: திராவிட நாட்டுப் பிரிவினைக் கொள்கைக்கு எதிர்ப்பு வளர வளர பாகிஸ்தானின் அமைப்பைப் போலவே ஆகிவிடும்.

பாபா: தனிப்படை வைத்திருந்தால் தனிநாடு ஆகிவிடுமல்லவா?

அண்ணா: இந்திய பெடரேஷனுக்குள் தனித்த சப்பெடரேஷனாக இயக்கும்.

பாபா: வெளிநாட்டு விவகாரங்கள் மத்திய அரசாங்கத்தின் கையிலிருந்தால் படையும் அவர்கள் கையில் தானே இருக்கும்.

அண்ணா: அப்படியில்லை. வெளிநாட்டு விவகாரங்களை இந்தியப் பெடரேஷன் சப்-பெடரேஷனுடன் கலந்து ஆலோசித்து முடிவுகள் செய்யும்.

பாபா: அப்பொழுது திராவிட நாட்டு கற்பனை சிலோனை ஒத்திருக்கிறது. விருப்பத்தின் பேரின் திராவிடநாடு இந்தியப் பெடரேஷனுடன் வெளிநாட்டு விவகாரங்களைப்பற்றி யோசிக்கும்.
அண்ணா: ஆம்.

பாபா: ஆந்திராவில் திராவிடநாட்டுப் பிரிவினைக்கு ஆதரவு கிடைக்குமா?

அண்ணா: ஆந்திராவில் இதுவரை எம் முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை. தமிழ்நாட்டிலேயே இன்னும் எங்கள் வேலை சரிவர முடியவில்லை.

பாபா: ஆந்திரர்கள் டில்லியோடு இணைந்து வாழவே விரும்புகின்றனர் என்று நினைக்கிறேன்.

அண்ணா: இன்றைய சூழ்நிலையில் அவ்வாறு தெரியலாம். ஆனால் டில்லி ஐந்தாண்டுத் திட்டம் போன்ற பல திட்டங்களில் ஆந்திராவையும், மைசூரையும், தமிழ் நாட்டையும் புறக்கணிக்க ஆரம்பித்திருக்கிறது. ஒவ்வொரு மாகாணத்திற்கும் கிடைத்திருக்கும் பங்கைப்போல உரிய பங்கு இவைகளுக்குக் கொடுக்கப்படவில்லை. இதுவரை ஆந்திரர்கள் தமிழர்களால் தான் தங்கள் வளர்ச்சி பாதிக்கப்படுகிறது என்று கருதினர். இனி பல வழிகளில் பல பிரச்னைகளில் ஆந்திரர்கள் டில்லியால் புறக்கணிக்கப்படுவதை உணரும் பொழுது எங்களோடு சேருவார்கள் என்ற நம்பிக்கை உண்டு.

பாபா: மத்திய அரசாங்கம் ஆந்திரர்களுக்கும் அநீதி செய்கிறது என்பதனால் இந்த நம்பிக்கை உங்களுக்கு ஏற்பட்டிருக்கிறது. டில்லி நியாயமாக நடந்துகொண“டால் அவர்கள் உங்களோடு சேர மாட்டார்களல்லவா?

அண்ணா: இல்லை, மத்திய அரசாங்கம் ஒன்று இருக்கும் வரை இப்படிப்பட்ட அநீதிகள் நடந்துகொண்டேதான் இருக்கும். இப்பொழுது இருக்கும் சர்க்கார் அளிக்கும் சலுகைகள் கூட

வடஇந்தியாவில் இனி வரும் சர்க்கார் அளிக்காது என்று எண்ணுகிறேன்.

பாபா: நீங்கள் சொல்லுவது சரி. உங்கள் காரியம் நம்பிக்கையின் அடிப்படையில் இருக்கின்றது. 4 மாகாணங்கள் ஒன்று சேர்ந்திருக்கும் பொழுது ஒரு மாகாணத்திற்கு நியாயம் வழங்காமல் போய் விட்டால் என்ன செய்வீர்கள்?

அண்ணா: ஒரு மாகாணம் தனக்குச் சரியான நியாயம் கிடைக்கவில்லை என்று உணர்ந்தால் அதற்குத் தனித்துச் செல்லும் அதிகாரம் இருக்கிறது.

பாபா: நீங்கள் அன்புடன் ஒன்று சேர்ந்து இருக்கலாம் என்று சொல்வது நன்றாக இருக்கின்றது. உங்கள் திராவிட நாட்டைப் போல், வங்காளமும், குஜராத்தும் அன்பின் அடிப்படையில் தனித்தனியே இயங்க விரும்பினால் இயங்கலாமல்லவா?

அண்ணா: நாங்கள் சொல்லும் தத்துவம் வளர்ச்சி பெற்றால் அங்ஙனம் நிகழலாம். ஆனால் அங்கிருக்கின்ற மக்களுக்கு அந்த உணர்ச்சி ஏற்படவேண்டும்.

அன்பின் அடிப்படையில் மொழிவாரி மாகாணங்கள்:

பாபா: நீங்கள் சொல்லுவதைப் புரிந்துகொண்டேன். அன்பின்

அடிப்படையில் மொழிவாரியாக மாகாணங்கள் பிரிந்து செல்லலாம் என்று சொல்லுகின்றீர்கள்.

அண்ணா: நீங்கள் சொல்லுவது சரி. சொல்லளவில் நாம் எல்லோரும் ஒன்றாக இருக்கின்றோம் என்று சொன்ன பொழுதிலும் தற்பொழுதுள்ள அமைப்பில் மொழிவாரி மாகாணங்கள் ஒன்றின்கீழ் ஒன்றாகவே அமையப் பெற்றிருக்கின்றன. ஒரு மாகாணம் மற்றொரு மாகாணத்தின் ஆளுகைக்கு உட்பட்டு இருக்கின்றது. இவ்வித நிலை இருக்கக் கூடாது எனவும் கருதுகின்றோம்.

பாபா: உங்களுடைய கருத்து முற்றிலும் அஹிம்சையின் அடிப்படையில் இருக்கிறதல்லவா?

அண்ணா: ஆம் உண்மை.

பாபா: பலாத்காரமாக இரு மொழி பேசும் மாகாணங்களை இணைத்துவைக்க அதிகாரமில்லையென்று சொல்லுகின்றீர்கள்.

அண்ணா: தத்துவத்தில் கூட பலாத்காரம் இருக்கக் கூடாது என்று கூறுகின்றோம்.

பாபா: அதனை நானும் ஒப்புக்கொள்கிறேன். உதாரணமாக மகாராஷ்டிர ராஜ்யத்தில் ஒரு ஜில்லா மத்திய அரசாங்கத்தினிட

மிருந்தும், தனித்துச் செல்ல விரும்பினால் தனியாகச் செல்ல அனுமதி கொடுக்க வேண்டுமல்லவா?

அண்ணா: கொடுக்க வேண்டும்.

பாபா: அப்படியானால் அஹிம்சைக் கொள்கையில் நம் இருவருக்கும் ஒற்றுமை இருக்கின்றது.
(மேலும் பாபா அவர்கள் கேட்டதாவது)

ஒவ்வொரு அரசாங்கமும் தனியாக படை வைத்துக் கொள்ள அனுமதித்தால் பெரிய நாடுகளால் சிறிய நாடுகளுக்கு ஆபத்துத் தானே?

அண்ணா: இப்பொழுது உலக அரங்கில் சிறிய நாடுகளும், பெரிய நாடுகளும் இருந்து வருகின்றன. அவைகள் சண்டையின்றி சமாதானமாக வாழ்வதற்கு முயற்சிகள் நடைபெற்று வருகின்றன. எதிர்காலத்தில் சிறிய நாடுகளும், பெரிய நாடுகளும் சண்டையின்றி ஒன்றுபட்டு வாழ தங்களைப் போன்ற பெரியார்களின் அஹிம்சைப் பிரசாரம் நல்ல பலனளிக்குமென்று நம்புகின்றோம்.

பாபா: உங்களுடைய இந்தக் கருத்து மேலும் நம்மை ஒன்று படுத்துகின்றது; நம்முடைய ஒற்றுமையை அதிகமாக்குகின்றது. ஆனால் அஹிம்சையில் உங்களுக்கு நம்பிக்கை இருக்கும் பொழுது படையின் அவசியமென்ன?

அண்ணா: பண்டைக் காலத்திலிருந்து படை வைத்திருக்கும் பழக்கம் இருந்து வருகின்றது.

பாபா: அது கெட்ட பழக்கமல்லவா?

அண்ணா: கெட்டபழக்கம்தான். படை வேண்டாமென்ற கருத்தும், அஹிம்சை முறையில் அரசாங்கம் அமைக்க வேண்டுமென்ற கருத்தும் இப்பொழுது தான் பரவி வருகின்றது. ராஜேந்திர பிரசாத்கூட இப்பொழுதுதானே உங்களிடம் உபதேசம் பெற்றுச் சென்றிருக்கிறார்!

(காஞ்சியில் நடைபெற்ற அகில இந்திய சர்வோதய சம்மேளனத்தின் பொழுது பாபா அவர்கள் படையை குறைக்க வேண்டும் என்று ராஜன் பாபுவின் முன்னிலையில் பேசியதையே அண்ணாதுரை இவ்வாறு குறிப்பிட்டார்.)

பாபா: பத்து மொழி பேசும் மாகாணங்கள் தனித்தனியாக இயங்கினால் கஷ்டமேற்படாதா?

அண்ணா: பத்து வருடங்களுக்குப் பின்னால் கஷ்டமே விளையுமென்று தெரிந்தால் ஒன்று சேர்ந்து விடுவோம்.

பாபா: (அரியநாயகம் அவர்களைப் பார்த்து) இவர் (அண்ணாதுரை) மிகவும் கள்ளங்கபடமற்றவர்.

(சிரிப்பு)

சமுதாயக் கொள்கை:

பாபா: சமுதாய சம்பந்தமாக உங்கள் கொள்கை என்ன?

அண்ணா: ஜாதிப் பூசல்களுக்கோ சமயச் சண்டைகளுக்கோ இடமிருக்கக் கூடாது. திருமூலரின் மந்திரமான 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற கொள்கையைக் கொண்டவர்கள்.

பாபா: ஜாதி இரண்டொழிய வேறில்லை! (தமிழில் கூறினார்) உங்கள் கருத்து நல்ல கருத்து.

பொருளாதாரக் கொள்கை:

பாபா: உங்களுடைய பொருளாதாரக் கொள்கையைக் கூறுங்கள்.

அண்ணா: எந்த அரசாங்கமாயிருந்தாலும் மனிதனின் அடிப்படைத் தேவையான உணவும் உடையும் வசிக்க இடமும் மக்களுக்குக் கிடைக்கவேண்டும். லாபம் பெறவேண்டுமென்ற நோக்குடன் இவற்றின் வியாபாரம் நடைபெறக் கூடாது.

பாபா: அதாவது சுரண்டலற்ற சமுதாயம் அமைக்க வேண்டுமென்கிறீர்கள்?

அண்ணா: ஆம்! சுரண்டலற்ற சமுதாயம் மட்டுமல்ல? லாப மனப்போக்கில்லாத சமுதாயம் காண விரும்புகின்றோம்.

பாபா: தனிச் சொத்துரிமை இருப்பதை விரும்புகிறீர்களா?

அண்ணா: நிச்சயமாக விரும்பவில்லை. அப்படியிருந்தால் லாபம் பெறவேண்டுமென்ற நோக்கம் வளர்ந்து விடுமே?

பாபா: கிராம நிலம் கிராமத்திற்குச் சொந்தகமாக இருக்க வேண்டுமல்லவா?

அண்ணா: ஆம்! கிராம நிலம் கிராமத்திற்குச் சொந்தமாக இருக்கவேண்டும். அத்துடன் ஒரு கிராமத்தில் விளைச்சல் குறைவாயிருக்கின்ற காலத்தில் அந்தக் கிராமத்திற்கு அரசாங்கம் உதவி செய்யவேண்டும்?

பாபா: விளைச்சல் அதிகமாயிருந்தால் என்ன செய்வது?

அண்ணா: பற்றாக்குறை கிராமங்களுக்குக் கொடுத்து உதவலாம்.

பாபா: உங்கள் கொள்கைக்கும் சர்வோதயக் கொள்கைக்கும் எந்தவிதமான வேற்றுமையும் கிடையாது. மிகுந்த மகிழ்ச்சி.

பூமிதான இயக்கம்:

பாபா: பூமிதான இயக்கத்திற்கு உங்களால் என்ன உதவி செய்ய முடியும்?

அண்ணா: பூமிதானப் பிரசாரம் செய்கிறேன். ஆனால் தமிழ்நாட்டில் இன்றைய சூழ்நிலையில் எங்கள் உதவியால் பிறருக்கு வருத்தம் ஏற்படலாம்.

பாபா: தனிப்பட்ட முறையில் தங்கள் பங்கு என்ன?

அண்ணா: எங்கள் பகுதிகளில் உங்கள் கருத்துக்களைக் கூறலாம்.

பாபா: தங்கள் இயக்கத்திற்கு செல்வாக்கு இருக்கின்ற இடங்களில் கருத்துப் பிரசாரம் செய்யலாமல்லவா?

அண்ணா: ஏற்கெனவே பாபாவைப் பற்றி பல இடங்களில் எடுத்துக் கூறியிருக்கிறேன். அய்யா (பாபா) நல்ல காரியங்களை செய்துகொண்டு வருகின்றார். அவரை ஏமாற்றிவிடாதீர்கள் என்று கூறி வருகிறேன். (பாபா சிரித்தார்)

பாபா: உங்களுக்கு நடக்கும் பழக்கம் உண்டல்லவா (சிரித்துக்கொண்டே கேட்டார்)

அண்ணா: ஓ! உண்டு.

பாபா: உங்கள் மாகாணத்தில் தங்கியிருக்கிறேன். அடிக்கடி சந்தியுங்கள்.

அண்ணா: (ஜெகந்நாதன் அவர்களைப் பார்த்து) நான்கைந்து மாதங்கள் தங்குகிறாரல்லவா?

ஜெகந்: ஆம், அதற்கு மேலும் தங்கலாம்.

அண்ணா: (பாபாவைப் பார்த்து) அவசியம் சந்திக்கிறேன்.

(இறைவழிபாட்டுக் கூட்டத்திற்கு நேரமாகிவிட்டபடியால் பாபா இத்துடன் முடித்துக் கொண்டார். திரு.அண்ணாதுரை பாபாவிற்கு வணக்கம் செலுத்தி விடைபெற்றுக் கொண்டார்.)

# தி.மு.க. நிலை

(17.07.1965 அன்று கோலாலம்பூரில் செய்தியாளர்களிடையே அண்ணா)

வினா: மலேசியா புதுக்குடியேற்ற அமைப்பு என்னும் முறையில் இந்தோனேசியா பலவகைக் குற்றச்சாட்டுகளைக் கூறி இருக்கிறது? அதைப் பற்றி நீங்கள் என்ன கருதுகிறீர்கள்?

அண்ணா: அதிபர் சுகர்னோவும் அவர்தம் நண்பர்களும் மலேசியாவை மட்டும் புதுக் குடியேற்ற நாடு என்று குறிப்பிடவில்லை. இந்தியாவையும் அவர்கள் புதுக்குடியேற்ற நாடு என்றே குறிப்பிட்டுள்ளனர்.

வினா: கம்யூனிஸ்டு சீனா அணுக்கருவிகளை உற்பத்தி செய்துவரும் இவ்வேளையில் அணுக்கருவிகளைச் செய்யப்போவதில்லை என்று இந்தியா கூறியுள்ளதே. அதைப் பற்றித் தங்கள் கருத்தென்ன?

அண்ணா: ஒருமுறை நாம் இந்த அணுக்கருவிப் போட்டியில் நுழைந்து விட்டோமானால், நாம் அரசியல்போர் நெறிமுறையில்

இறங்கிவிட்டோம் என்றுதான் பொருள். ஆகவே, இந்தப் போட்டியில் ஈடுபட இந்தியா ஒரு நாளும் விரும்பாது என்ற தனிப்பட்ட முறையில் நானும் மற்றும் என் இந்திய உடன்புறப்புகள் பலரும் கருதுகிறோம்.

வினா: மாபெரும போர் ஏற்படும் நிலையில், அதனால் உருவாகும் தீய விளைவுளை இந்த அணுக்கருவிப் போராட்டத்தில் சேராதுபோனால் இந்தியா தாக்குப்பிடிக்க முடியுமா?

அண்ணா: இந்தத் துறையில் இந்தியா அவ்வளவு பாதிக்கப்படாது. அதற்காக அது வருந்தவும் செய்யாது என்பதே என் தனிப்பட்ட கருத்தாகும்.

வினா: இந்தியக் குடிவழியைச் சேர்ந்த மலேசியர்களின் சரியான பணி எவ்வாறு இருக்க வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?

அண்ணா: இந்நாட்டிலிருந்து வரும் இந்தியர்கள் இங்குப் பிறந்திருந்தாலும் சரி அல்லது இந்நாட்டைத் தங்கள் வாழ்க்கைக்குரிய நாடாக ஏற்றுக்கொண்டாலும் சரி அவர்கள் தங்கள் பற்றுறுதியையும் இந்நாட்டிற்கே தெரிவித்து அதற்கேற்ப நடந்து வரவேண்டும். அவர்களுக்கு இந்நாடுதான் சொந்தநாடு. அவர்கள் இந்நாட்டில் குடிமக்களாவர். ஆகவே, அவர்கள் இந்நாட்டின் மீது ஆழ்ந்த பற்றுக் கொண்டு வாழ்ந்து வரவேண்டும்.

நேற்றுச் சிங்கையில் குறிப்பிட்டதுபோல் நான் என் நாட்டின் தூதுவனாக மற்றொரு நாட்டுக்கு வந்திருக்கிறேன். என் நாட்டின் பரிவையும் ஆதரவையும் மலேசியாவிற்குத் தெரிவித்துக் கொள்ளலாம். ஓர் அண்டை நாட்டின் தேவையற்ற தான் தோன்றித்தனமான வலுத்ததாக்குதல் மீது இந்தியா கொண்டுள்ள வெறுப்பினைத் தெரிவித்துக் கொள்ளவுமே நான் இங்கு வந்திருக்கிறேன்.

பன்மையில் ஒருமை என்னுங் கொள்கைக்கு மலேசியா சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது. பல்வேறு இனமக்களைக் கொண்ட ஒரு நாடு ஒற்றுமையுடன் திகழ்ந்து வருகிறது என்பதில் மலேசியா தனி இடத்தைப் பிடித்தி ருக்கிறது.

உங்கள் மாபெருந் தலைமையமைச்சர் மாண்புமிகு துங்க அப்துல் ரகுமான் அவர்களைச் சந்தித்துப் பேசும் வாய்ப்பினைப் பெற முடியாதுபோனதுதான் எனக்குப் பெருங்குறையாக இருக்கிறது.

இந்தியா மற்றொரு வலுத்தாக்குபவரால் தாக்கப்பட்டபொழுது, எங்கள் நாட்டுக்கு வெளி ப்படையான ஆதரவைத் தெரிவி க்க முன்வந்த முதலாவது அரசியலறிஞர் துங்குவாக இருப்பதால், இந்தியாவிலுள்ள நாங்கள் உங்கள் துங்குவுக்கு என்றும் நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளோம்.

எனக்குக் கிடைத்த செய்திகளிலிருந்தும், நான் கேட்டறிந்த வகையிலும் உங்கள் நாட்டுத் தலைமை அமைச்சர் மிகவும் அடக்கமாகவும் குறிப்பிடத்தக்க அறிவியல் அறிவு படைத்த மாபருந் தலைவராகவும் இருந்து வருகிறார் என்பதை உணருகிறேன்.

வினா: இந்தியாவை நோக்கி இருக்கும் ஒரு ஆபத்துகள் என்ன?

அண்ணா: இந்தியாவில் நாங்கள் ஒரு ஆபத்துகளை எதிர்நோக்கி இருக்கிறோம். ஒன்று கட்ச்-ரண்ணில் பாக்கிஸ்தான். மற்றொன்று இந்திய எல்லையில் சீனா. இந்த இருதரப்புகளிடமிருந்தும் நாங்கள் மிகவும் தொல்லையான எல்லைப் பிரச்சினைகளை எதிர்நோக்கியுள்ளோம்.

வினா: தனிநாடு ஏன் நீங்கள் கோரவில்லை?

அண்ணா: என் கட்சி தனிநாட்டுக்காகக் கோரிக்கை எழுப்பிவந்ததே தவிரக் கூச்சலிடவில்லை. ஆனால், இப்போது ஒரு கடும் வெளிமிரட்டல்களை எதிர்நோக்கி வருவதால், நாங்கள் எங்கள் கோரிக்கையை கைவிட்டுவிட்டோம். இப்போது தி.மு.கழகத்திலுள்ள நாங்கள் இந்திய அரசியல் சட்டத்திற்கிணங்கவே ஒரு கட்சியாக இயங்கி வருகிறோம்.

இன்று திமுக ஓர் அரசியல் கட்சியாக மட்டுமன்று, பண்பாட்டுக் கழகமாகவும் பணியாற்றி வருகிறது.

(17.07.1965 அன்று கோலாலம்பூரில் செய்தியாளர்களிடையே அண்ணா)

# நல்லவர் விரும்பும் தொடர்பு

(மலேசிய வானொலிக்கு அண்ணா அளித்த பேட்டி 17.07.1965)

வினா: தலைமையமைச்சர் துங்குவைப்பற்றி…

அண்ணா: இந்தியா மீது சீனர் படையெடுத்தபோது. மலேசிய நாட்டின் தலமையமைச்சர் துங்கு அவர்கள் ஆதரவு அளித்ததும் நிதியளித்ததும் இந்திய வரலாற்றில் என்றும் பொன்னெழுத்துகளால் பொறிக்கப்படவேண்டியது.
இந்திய மக்கள் உங்கள் துங்குவின் பெருமையையும் அரசியல் பெருந்தன்மையையும் நன்கு அறிந்துள்ளவர்கள்.

வினா: மலேசியாவிற்குத் தாங்கள் வந்ததன் நோக்கம்?

அண்ணா: மலேசிய நாட்டின் அரசியல்முறை, இங்கு வாழும் மக்கள் நிலை ஆகியவற்றை அறியவே மாணவன் என்னும் முறையில் நான் இங்கு வந்துள்ளேன்.
மலேசியத் தலைமையமைச்சர் துங்குவைக் காண ஆவல் கொண்டுள்ளேன். சிறந்த தலைவரான அவரைக் காணப்பெற்றால் பேருவகை கொள்வேன்.

வினா: நாடகங்களைப் பற்றித் தங்கள் கருத்து…

அண்ணா: சமூகத்தில் ஊழல்களை எடுத்துக் காட்டிச் சீர்திருத்தக் கருத்துகளைப் புகுத்தும் நாடகங்களுக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது.
இந்தியாவில் புரட்சி வசனங்களைக் கொண்ட நாடகங்களுக்குக் கட்டுப்பாடு விதிக்கப்படுகிறது.
திறமை வாய்ந்த எழுத்தாளர்களால் எழுதப்படும் நாடகங்கள் இந்தியாவில் எல்லா மொழிகளிலும் நடத்தப்படுகின்றன. இதில் தமிழ் எழுத்தாளர்கள் முன்னணியில் இருக்கின்றனர்.

வினா: நாடகங்களைப் பற்றித் தங்கள் இளமைக்கால நினைவுகள் யாவை?

அண்ணா: நான் இளம்வயதில் பல நாடகங்களில் நடித்துள்ளேன். நடிப்பின்போது உண்மையாக ஏற்கும் பாத்திரமாகவே மாறி நடிப்பேன்(துரைராஜ், காகப்பட்டர்)

வினா: தற்பொழுது தங்கள் நாடக ஈடுபாடு எவ்வாறு உள்ளது?

அண்ணா: இப்போது 24 மணிநேரமும் அரசியலில் மூழ்கி இருப்பதால், நாடகத்தில் நான் கவனம் செலுத்த முடியவில்லை.

வினா: எதிர்காலத்தில் தமிழ் வளர்ச்சி எப்படி இருக்கும்?

அண்ணா: உலகிலேயே பல இலக்கியங்களைப் பெற்றுள்ளதும், பழமையானதும், மிக்க செல்வாக்குள்ளதுமான மொழி தமிழ். எதிர்காலத்தில் அதன் வளர்ச்சி மிகப் பெரியதாக இருக்கும். கற்பனை வளம்பெற்ற திறமைவாய்ந்த எழுத்தாளர்களின் எண்ணிக்கை இப்போது பெருகிவருகிறது.
அவர்களின் மூலம் தமிழ் இலக்கியம் மறுமலர்ச்சியுடன் ஒளிவிடும்.

(மலேசிய வானொலிக்கு அண்ணா அளித்த பேட்டி 17.07.1965)

# அரசியலறிவும் உணர்வும்

(14.02.1967 அன்று உலகப்புகழ் பெற்ற வாஷிங்டன் போஸ்ட் என்னும் இதழுக்கு அளித்த பேட்டி)

கேள்வி: இந்த முறை நடக்கும் தேர்தலில்(1967) உங்கள் கழகம் அதிக வலிவுறப்போகிறது என்று அனைவருமே கூறிகின்றனர். அது எந்த அளவுக்கு என்று கூற முடியுமா?

அண்ணா: ஆட்சி அமைக்கும் அளவுக்கு.

கேள்வி: உங்கள் கூட்டணியில் தோழமைக் கட்சிகள் நிறைய இருக்கின்றன. இவ்வளவையும் வைத்துக் கொண்டு எப்படி அமைச்சரவை அமைப்பீர்கள்?

அண்ணா: கட்சி அடிப்படையில் பிரநிதித்துவத்தை வற்புறுத்தாமல், திமுக அமைச்சரவைக்கு ஆதரவு தரமுடியும் என்று எல்லா நண்பர்களும் உறுதி தெரிவித்திருக்கிறார்கள்.

கேள்வி: உங்கள் கூட்டணியில் பிரச்சினைகள் எவையேனும் கிளம்புமா?

அண்ணா: நிச்சயம் எழா. கூட்டுணர்வு நிரம்ப இருக்கிறது.

கேள்வி: நீங்கள், எப்படி இந்த அளவுக்கு வளர்ந்தீர்கள்?

அண்ணா: காங்கிரசின்பால் மக்கள் கொண்ட அதிருப்தி. அதைப் போக்கி நிறைவு செய்யும் வகையில் இருக்கும் எங்கள் பணிகள்.

கேள்வி: உணவு நிலைமை இப்படி மாறக்காரணமென்ன?

அண்ணா: உணவுத் துறையில் வகையற்ற திட்டங்கள் போடப்பட்டதுதான்.

கேள்வி: காமராஜரின் காங்கிரஸ் கட்சி சொந்த மாநிலத்திலேயே பதவி இழந்தால், அவரது அனைத்திந்திய நிலைமை என்ன ஆகும்?

அண்ணா: காங்கிரசையே மாற்றியமைக்க முனைவார்.

கேள்வி: நீங்கள் ஆட்சிக்கு வந்தால் எனன வழங்குவீர்கள்? எதைச் செய்வீர்கள்?

அண்ணா: நேர்மையான ஆட்சி.

கேள்வி: மொழிப் பிரச்சினையைப் பற்றி கூற முடியுமா?

அண்ணா: ஆட்சிமொழியாக இந்தி திணிக்கப்படுவதை எதிர்க்கிறோம். இதற்காக அரசியல் சட்டம் உரிய முறையில்

திருத்தியமைக்கப்படவேண்டும் என விரும்புகிறோம். நாங்கள் இநதித் திணிப்புக்கு எதிரானவர்கள் என்பதை மக்கள் மிகத் தெளிவாக உணர்ந்துவிட்டார்கள். ஆனால், இங்கே உள்ள அமைச்சரவை இந்த உண்மை நிலையைப் புதுதில்லி அரசுக்கு உணர்த்தவில்லை.
நாங்கள் வெற்றிபெற்றால், ஆட்சியின் மூலம் மக்கள் பிரதிநிகள் என்னும் வகையில் மொழிப் பிரச்சினையை உரிய வகையில் புதுதில்லிக்கு உணர்த்துவோம்.
மாநிலத்தின் தேவைகளுக்காகவும் மைய அரசுடன் அவ்வப்போது போராடி வேண்டியனவற்றைப் பெறுவோம்.

கேள்வி: உணவு அமைச்சரின் தேசிய உணவுத் திட்டத்தைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

அண்ணா: அவரது திட்டம் உண்மையில் ஆக்க முறையான திட்டமல்ல. மாநிலங்களின் எந்த முதலமைச்சரும் தங்கள் உபரியைத் தேசியக் கொள்முதலுக்குக் கொடுக்கத் தயாராக இல்லை.
தென்னக மாநிலங்களைப் பொறுத்தவரையில் நான்கும் தங்கள் தேவைகளைத் தாங்களே போக்கிக் கொள்ள முடியும்.

கேள்வி: அப்படியானால் மற்ற மாநிலத்தின் தேவை என்ன ஆகும்?

அண்ணா: இவைகளில் பெரும்பகுதி அரிசியை உணவாகக் கொண்டிருக்கவில்லை.

கேள்வி: இலங்கை அகதிகளைப் பற்றி...

அண்ணா: இதுபற்றி இலங்கை-இந்திய அரசுகள் ஏற்படுத்திக் கொண்ட ஒப்பந்தத்தை நாங்கள் கண்டித்திருக்கிறோம். எங்களைப் பொறுத்தவரையில் நேரு கூறிய இந்தியக் குடி வழியினரான இலங்கைக் குடிமக்கள் என்னும் கொள்கையைத்தான் மதிக்கிறோம்.

கேள்வி: அகதிகளுக்குத் தரப்பட்டுள்ள நிவாணங்கள் உங்களுக்கு மனநிறைவை அளிக்கின்றனவா?

அண்ணா: நிச்சயம் இல்லை. சிறுகடைகள் வைத்துக் கொள்வதற்காக என்று அதற்கும் போதாத தொகைகள் கொடுக்கப்படுகின்றன.
இந்த அகதிகள் எல்லாம் மலைத் தோட்டங்களில் வேலை செய்து பயிற்சி பெற்றவர்கள். அவர்களை அத்தகைய வேலைக்குத்தான் பயன்படுத்த முடியும். நான்கு மாநிலங்களும் ஒருமித்துச் செயலாற்றினால் இதற்கு ஒரு வழி கிடைக்கும்.

கேள்வி: அன்றாடம் நீங்கள் மக்களைச் சந்திக்கிறீர்கள். அவர்களிடம் என்ன பேசுகிறீர்கள்?

அண்ணா: ஜனநாயகம் பற்றி அவர்களுக்கு அறிவுறுத்துகிறோம். மக்களுக்கு அரசியல் அறிவும் உணர்வும் உண்டாக்குகிறோம்.

(14.02.1967 அன்று உலகப்புகழ் பெற்ற வாஷிங்டன் போஸ்ட் என்னும் இதழுக்கு அளித்த பேட்டி மூலம் நம்நாடு 17.02.1967)

# இயன்றதைச் செய்வோம் இயலாததை விடுவோம்

(24.02.1967 ஆட்சிப் பொறுப்பு ஏற்பதற்கு முன் சென்னையில் செய்தியாளர்களுக்கு அளித்த பேட்டியின் சுருக்கம்)

தலைமை: உங்களிடம் மறைப்பானேன். தென் சென்னைப் பாராளுமன்ற உறுப்பினர் பதவியிலிருந்து விலகிக் கொண்டு இங்கே தமிழகத்தில் அமைய இருக்கும் அமைச்சரைவையைத் தலைமை ஏற்று நடத்த இருக்கிறேன்.

வினா: தாங்கள் பதவி விலகுவதால் காலியாகும் சென்னைப் பாராளுமன்ற உறுப்பினர் இடத்தை ஒரு காங்கிரசாருக்கு விட்டுக் கொடுப்பீர்களா?

விடை: அதனால்தான் மைய அரசு தேசிய அரசாக இருக்கவேண்டும் என்று எங்களில் சிலர் சொல்லுகிறோம். நீங்கள் ஏன் இதை அரசாங்கத்துக்கு அறிவுறுத்தக் கூடாது? இருந்தாலும் தென்

சென்னைப் பாராளுமன்ற இடத்துக்காகக் காங்கிரஸ்காரர்கள் என்னை அணுகினால் நான் அதைக் கவனிப்பேன்.

அமைச்சரவை:

புதிதாக தேர்ந்தெடுக்கப்பட்ட திமுக சட்டமன்ற உறுப்பினர்கள் வருகிற ஞாயிற்றுக்கிழமை (26.02.1967) சென்னையில் கூடுகிறார்கள். ஆனாலும், அமைச்சரவை அமைய இரண்டு வாரம் ஆகலாம். இப்போதுள்ள அமைச்சரவையைவிட அது பெரிதாக அமையலாம். ஏனெனில், நாங்கள் எல்லாம் இந்தப் பொறுப்புக்குப் புதியவர்கள் என்பதை நீங்கள் அறிவீர்கள். அமைச்சர்களுக்குப் பல துறைகளைக் கொடுத்துச் சுமையை அதிகமாக்க நான் விரும்பவில்லை. அமைச்சரவையின் அளவும் பொறுப்புகளும் பற்றி ஞாயிற்றுக்கிழமைக் கூட்டத்தில் முடிவு செய்யப்படும். உறதியாக ஒரு பெண் அமைச்சர் இருப்பார். முதலமைச்சருக்குத் துணையாக துணையமைச்சர்கள் இருக்கமாட்டார்கள். ஒரு பாராளுமன்றச் செயலர் மட்டுமே இருப்பார்.

வினா: ம.பொ.சி. சட்டமன்றத் தலைவர் ஆகக்கூடிய வாய்ப்புள்ளதா?

விடை: என் நண்பர் ம.பொ.சி. ஆற்றல் மிக்க சிறந்த பேச்சாளர். அவர் சட்டமன்றத்தில் தேவை. அவைத்தலைவராகி அவரை மௌனியாக்கிட நான் விரும்பவில்லை. அது மட்டுமன்றி அவரும்

தம்முடைய தமிழரசுக் கழகத்தின் தனித்தன்மையைக் காப்பாற்றிக் கொள்ள விரும்பக்கூடும்.

தூய நிர்வாகம்:

துய்மையான திறமையான நிர்வாகம் அமையத் திமுக முயற்சி மேற்கொள்ளும்.

இந்தி பிரச்சனை:

இந்தி பிரச்சினையில் திமுக தன் கொள்கையில் உறுதியாக நிற்கும். இந்தி தனி ஆட்சிமொழி ஆவதை எதிர்க்கும். 14 தேசிய மொழிகளும் ஆட்சி மொழிகளாகும் வரை ஆங்கிலம் தொடர்பு மொழியாக இருந்திட வேண்டும். இந்தி ஆட்சி மொழியாகத் திணிக்கப்படும் வேகத்தைத் தடுத்து நிறுத்தி, அதற்கேற்ப அரசியல் சட்டத்தை திருத்தும் பிரச்சினையும் கட்சித் திட்டங்களில் ஒன்றாகும்.

திராவிடம்:

ஏற்கனவே மண்டல மன்றம் இருக்கிறது. வெறுங்கருத்துரை வழங்கும் கழகமாக இருக்கும் அந்த மன்றத்திடம் ஏன் அதிகாரங்களை ஒப்படைக்கக் கூடாது என்று ஆராயப்படும். கடந்த இருபதாண்டுகளாக இந்திய அரசியல் சட்டம் செயல்பட்ட முறையை ஆராய ஒரு குழு அமைக்க வேண்டும் என்பது என் எண்ணம். மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் தர வழி என்ன என்று ஆராயப்படவேண்டும்.

அதிகாரம்:

கல்வி, தொழில், வரிபோடுதல் போன்ற துறைகளில் மாநிலங்களுக்கு இன்னும் அதிக அதிகாரங்கள் வேண்டும். தொழில்களுக்கான அனுமதி வழங்குவதில் மாநிலங்களுக்கு அதிய அதிகாரங்கள் இருக்கவேண்டும்.

விடுகை உரிமைக்கும் உரிம முறைக்கும் (permit and licence) நாங்கள் எதிரிகள் அல்லர். அதில் நெளியும் முறைகேட்டையும் ஊழலையுந்தான் கண்டிக்கிறோம்.

என்னைப் பொறுத்தவரையில் நாட்டின் முழுத்தன்மையையும் எல்லைகளையும் காப்பாற்றும் அளவுக்கு அதிகாரம் மட்டும் மைய அரசுக்கு இருந்தால் போதும். மைய அரசின் கைப்பாவையாக இருப்பது, பொருளாதார முழுமை ஆகாது. திட்டமிடுதல் பரவலாகக் கீழ்மட்டத்திலிருந்து இடப்பட வேண்டும்.

அரசியல் சட்டம் செயல்படும் வகையை அவ்வப்போது மதிப்பிடும் முறை சட்டத்தில் சேர்க்கப்படவேண்டும்.

நான் திராவிடநாடு கேட்கவில்லை. மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் வேண்டும் என்றுதான் சொல்லுகிறேன். பெருமைக்குத் திட்டமிடுவதைத் தவிர்த்து. உடனடியாகப் பயன்தரும் திட்டங்கள் இடப்படும்.

மதுவிலக்கு:

நாங்கள் மதுவிலக்கு ஆதரவாளர்கள். அதைமேலும் செம்மையாகச் செயல்படுத்த முயல்வோம்.

குதிரைப் பந்தயம்:

குதிரைப்பந்தயம் நடத்தப்படுவது அறவே ஒழிக்கப்படும்.

பேருந்து நாட்டுடைமை:

பேருந்துத் தொழிலைத் தேசிய உடைமை ஆக்குவது பற்றி அதிக அக்கறை செலுத்தப்படும். ஆனால், பேருந்து நாட்டுடமையாவது பற்றி ஏற்கனவே காங்கிரஸ் அரசை வற்புறுத்தி இருக்கிறோம்.

நிலச்சீர்திருத்தம்:

திமுக அமைச்சரவை நிலச்சீர்திருத்தத்தீ லும் அக்கறை காட்டும். நில உச்சவரம்புச் சட்டப்படி அளிக்கப்பட்டிருக்கும் சலுகைகள் நீக்கப்படும்.

உணவுநிலை:

நம் பொருளாதாரம் உணவுப் பண்டங்களின் மீது அமைக்கப்பட்ட பொருளாதாரம். அரிசிவிலை வீழ்ந்தால் மற்றப் பண்டங்களையும் அது தாக்கும்.

விளைச்சலை உயர்த்த வேண்டும் என்னும் எண்ணத்தை உழவர் மனத்தில் நாம் உண்டாக்கிடவேண்டும். எனவே, உழவுத்

தொழிலுக்குத் தேவையான பொருள்களின் விலைகள் கணிசமான அளவுக்குக் குறைக்கப்படவேண்டும். திமுக அரசு இந்த வகையில் முனைப்புடன் செயல்படும்.

மாணவர் பிரச்சினை:

மாணவர் பிரச்சினை புதிதான ஒன்றல்ல. அது எங்கும் உள்ளது; என்றும் உள்ளது. மாணவர்கள் அரசியலைத் தெரிந்துகொள்ளக் கூடாது. ஈடுபடக்கூடாது என்று சொல்லவில்லை. உண்மையில் சில பிரச்சினைகளில் அவர்கள் மூலமாக நமக்குப் புதிய நோக்கம் கிடைக்ககூடும். ஆனால், படிப்பைப் பணயம் வைத்து அவர்கள் அரசியல் கிளர்ச்சிகளில் பங்கு கொள்ளக்கூடாது என்று நான் சொல்கிறேன்.

இலவசக் கல்வி:

முடிந்த அளவுக்கு இலவசக் கல்வி தரப்படுதல் வேண்டும். ஆனால் அந்தக் கல்வி தரமுள்ளதாகவும் இருத்தல் வேண்டும். அந்த வகையில் நான் கல்வி வல்லுநர்களுடன் கலந்துரையாட இருக்கிறேன்.

பயனுள்ள நடவடிக்கைகள்:

காங்கிரஸ் அரசு விட்டுவிட்டுப் போன பிரச்சினைகள் எவைஎவை என்பதை அறியும் பொருட்டு முதலில் நாங்கள் இப்போதுள்ள நிலையைப் புரிந்து கொள்ள வேண்டும். பிறகு உணவுப் பிரச்சினையில் கட்சி அக்கறை செலுத்தும்.

நிர்வாகத்தில் சிக்கனம், கிராமப்புறங்களில் பரவலாகத் தொழில்களை நிறுவுதல், ஒரே இடத்தில் பொருள் வளம் குவிவதைத் தடுத்தல் போன்ற பிரச்சினைகளில் கவனம் செலுத்தப்படும்.

நல்ல பலனில்லாமல் வீண் ஆடம்பரத்திற்காக நிறைவேற்றப்படு ம் திட்டங்களில் பெருமளவு மூலதனத்தை முடக்குவதற்குப் பதில், உடனடியாகப் பயன்தரும் திட்டங்களுக்கே முதலிடம் தரப்படவேண்டி இருப்பதால், அதற்கேற்ப மாநிலத் திட்டங்களை மாற்றியமைக்கவேண்டிய தேவை இருக்கிறது. ஆனால் ஏற்கனவே ஒப்புக்கொள்ளப்பட்ட சேலம் உருக்காலை, கல்பாக்கம் அணுநிலையம், தூத்துக்குடி துறைமுகத்திட்டம் போன்றவற்றைச் செயல்படுத்தவும் மக்களின் அன்றாட வாழ்க்கைக்குப் பயன்படும் தேவைப்பொருள்களின் விலையைக் குறைக்க நடவடிக்கை மேற்கொள்ளவும் திமுக அரசு மைய அரசை வற்புறுத்தும்.

நன்றி:
கூட்டணியின் முன்னோடியாகத் திகழும் திமுக ஆட்சிப் பொறுப்பெற்க ஒரு வாய்ப்பளிக்கவேண்டும் என்ற முடிவுக்கு மக்கள் வந்துவிட்டனர். ஆட்சிப் பொறுப்பை ஏற்கும் பக்குவம் கழகத்துக்கு வந்துவிட்டது என்றும், எனவே மக்களுக்கு அது நன்மையே செய்யும் என்றும் மக்கள் உறுதியாக நம்புகிறார்கள்.

அந்தப் பணியில் எங்களுக்குத் துணையாக இராஜாஜி, காயிதே மில்லத் முகமது இஸ்மாயில் போன்ற முதிர்ந்த அரசியல் அறிஞர்களின் அறிவுரை கிடைத்திருப்பதால், திமுக நிலையான ஆட்சி அமைக்கும் என்று மக்கள் முழுக்க நம்புகிறார்கள். ஆகவே, அவர்களுக்கும் இச்சமயம் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

(24.02.1967 ஆட்சிப் பொறுப்பு ஏற்பதற்கு முன் சென்னையில் செய்தியாளர்களுக்கு அளித்த பேட்டியின் சுருக்கம்)

# துணை அமைச்சர்கள்

(06.03.1967 அன்று செய்தியாளர்கள் வினாக்களுக்கு அண்ணா அளித்த விடை)

வினா: இரண்டாவது அமைச்சர்கள் பட்டியல் இருக்குமா?

விடை: தற்போது இல்லை.

வினா: துணை அமைச்சர்களை அமர்த்தும் எண்ணம் உண்டா? எத்தனை பேர்களை அமர்த்தப் போகிறீர்கள்?

விடை: தற்போதைய அமைச்சரவையைச் சேர்ந்த சிலர் அமைச்சர் பதவியிலிருந்து விலகிக் கட்சிப் பணிக்குச் சொல்லக் கூடும். அவ்வாறு நேரிட்டால் நிர்வாகத்தை நடத்த இரண்டாகத்தான் துணை அமைச்சர்கள் அமர்த்தப்படுகின்றனர்.

வினா: உணவுப் பிரச்சினையைத் தீர்ப்பதில் முதல் கவனம் செலுத்துவீர்களா?

விடை: புதிய அமைச்சரவை உணவுப் பிரச்சினையில் உடனடியாகக் கவனம் செலுத்தும்.

# தவறு செய்தபோது திருத்துங்கள்

(07.03.1967 அன்று சென்னையில் வானொலி நிலையச் செய்தியாளருக்கு அளித்த பேட்டி)

வானொலிச் செய்தியாளர்: முதலமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் உங்களுக்கு என் வாழ்த்துக்கள். உங்கள் கட்சிக்குக் கிடைத்திருக்கும் வெற்றி எதிர்பாராத வெற்றியா?

அண்ணா: வாழ்த்துக்கு நன்றி. பொதுமக்களிடம் நல்ல தெளிவு இருககிறது. கட்சி மாற்றம் ஏற்படவேண்டும் என்னும் உணர்வு அவர்களிடம் இருப்பது எனக்கு நன்றாகத் தெரியும். ஆயினும், அந்த உணர்வை இவ்வளவு தெளிவாகக் காட்டி இருப்பது எனக்குக்கூட வியப்பாகவே இருக்கிறது?

வினா: திமுகவின் வெற்றிக்குக் காரணமென்ன?

அண்ணா: திமுக மீது மக்கள் நம்பிக்கை வைத்திருக்கிறார்கள். எனவே கழகத்தின் தேர்தல் அறிக்கையையும் அவர்கள் ஆதரிப்பதாகத்தான் கொள்ள வேண்டும்.

வினா: ஆட்சியில் அமர்ந்ததும் உடனடியாக என்ன நடவடிக்கை எடுக்கப் போகிறீர்கள்?

அண்ணா: உடனடியான பிரச்சினைகளுக்கு உடனடியான நடவடிக்கை எடுக்கப்படும். இப்போது உணவுப் பிரச்சினை. எனவே, உணவுப் பிரச்சினையைத் தீர்க்க உடனடியாக நடவடிக்கை எடுப்போம்.

வினா: இந்தத் தேர்தல் நேர்மையாக நடந்தது என்று சொல்வீர்கள் அல்லவா?

அண்ணா: தமிழ்நாட்டு மக்கள் தெளிவுக்குப் பெயர்பெற்றவர்கள். சில இடங்களில் ஆளுங்கட்சியினர் தவறான முயற்சிகளில் ஈடுபட்டார்கள் என்ற புகார் வந்தது. காங்கிரஸ் கட்சியினர் தரக்குறைவான பிரச்சாரங்களில் ஈடுபட்டார்கள் அவ்வளவே.

வினா: தில்லியில் காங்கிரஸ் ஆட்சி ஏற்பட்டிருப்பதால், நாட்டின் பொது முன்னேற்றத்திற்குத் திமுக பங்கு என்ன?

அண்ணா: நாட்டின் முன்னேற்றத்திற்குத் திமுகவினால் எந்த இடையூறும் ஏற்படாது. ஒரு பகுதி தாழ்வடைய விடமாட்டோம். எந்தப் பிரிவினருக்கும் எந்த வழியிலும் ஏற்றத்தாழ்வின்றி நாட்டின்

முன்னேற்றத்திற்கு வழி வகுக்குங் கொள்கைகளை திமுக கடைபிடிக்கும்.

வினா: முதலமைச்சர் ஆகியிருக்கும் நீங்கள் மக்களுக்கு விடுக்கும் செய்தி என்ன?

அண்ணா: செய்தி விடுப்பதைவிட என்னுடைய வேண்டுகோளை வானொலி மூலம் மக்களுக்குப் பரப்புங்கள். பொதுமக்கள் என்னோடு இருக்கவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். எனக்குத் தயக்கம் ஏற்படும்பொழுது உற்சாகங் கொடுங்கள். தவறு செய்தபோது திருத்துங்கள். தடுமாற்றம் ஏற்படும்பொழுது உற்சாகங் கொடுங்கள். மக்களுக்கு விடுக்கும் வேண்டுகோள் இதுதான்.

(07.03.1967 அன்று சென்னையில் வானொலி நிலையச் செய்தியாளருக்கு அளித்த பேட்டியில் கூறியவை)

# பிரச்சினைகள் பல

(06.04.1967 -ல் தில்லியில் செய்தியாளர்களுக்கு அளித்த பேட்டியின் சுருக்கம்)

உணவு நிலைமை:

தமிழக அரசு தன்னுடைய உணவுத் தேவை இலக்கில் 40 சதவீத அளவுக்கு கொள்முதல் செய்திருக்கிறது. சிக்கல்கள் எவையுமின்றிக் கொள்முதல் நடைபெற்று வருகிறது. இலக்கை அடைந்த உடன் தாலுக்காக்களில் போக்குவரத்துக் கட்டுப்பாடுகள் தளர்த்தப்படும்.

உணவுப் பங்கீடு:

இப்பொழுது வழங்கப்பட்டு வரும் உணவுப் பங்கீட்டு அளவைக் குறைக்கக் கூடாது

பர்மா அரிசி:

பர்மா அரசு தரவேண்டிய பணத்திற்குப் பதிலாக அரிசியைக் கேட்டுப் பெறவேண்டும் என்று மைய அரசை வலியுறுத்துவோம். பர்மா அரசு செட்டியார் சமூகத்திற்குப் பர்மாவிலுள்ள நிலங்களுக்கு ஏக்கர் ஒன்றுக்கு ரூ.200 வீதமாக இழப்பீட்டுத் தொகை தருவதாக ஒப்புக்கொண்டிருக்கிறது. ஒரு ஏக்கர் நிலத்தின் ஓராண்டு

வருமானமாகும் இது. பர்மா அரசு தரவேண்டியன முழுதும் கணக்கிட்டால் ஏறத்தாழ ரூ.15 கோடியாகும். பர்மா அரைசிடமிருந்து இதற்குப் பதிலாகத் தமிழ்நாட்டிற்கு அரிசி கிடைக்கும்படிச் செய்யவேண்டும்.

அகவிலைப்படி:

மாநில அரசு ஊழியர்களின் அகவிலைப்படி உயர்வுக்குத் தேவைப்படும் அதிகப்படியான தொகையை மைய அரசு வழங்கவேண்டும். ரூபாய் மதிப்புக் குறைப்புக்குப் பின் பணவீக்கம் அதிகரித்ததற்கும் விலை உயர்வுக்கும் மைய அரசே காரணமாதலால், அதுதன் பொறுப்பைத் தட்டிக் கழிக்க முடியாது.

மதுவிலக்கு:

மதுவிலக்கை அமல்படுத்துவதால் தமிழ்நாட்டு அரசுக்கு ரூ.30 கோடி இழப்பு ஏற்படுகிறது. சென்னையில் மதுவிலுக்கு அமல்படுத்தப்படும்பொழுது பெங்களூரிலும் புதுச்சேரியிலும் அது கிடையாது. குடிப்பவர்கள் அங்குச் செல்வது கடினமல்ல.

மாறுதல்:

இப்பொழுது மைய, மாநில அரசுகளின் உறவுமுறையில் மாறுதல் தேவை. மாநில மைய அரசுகளின் அதிகாரத்தை பற்றிப் பொதுபட்டியல் வகுப்பதை நான் விரும்பவில்லை.

கோப்பு எரிப்பு:

முன்னாள் முதலமைச்சர் பக்தவச்சலம் இந்தி எதிர்ப்புக் கோப்புகளை அழித்ததற்குச் சில அதிகாரிகள் ஆலோசனை காரணமாக இருக்கலாம். ஒரு முதலமைச்சர் கோப்பை அழிப்பதற்கு என்ன உரிமை இருக்கிறது என்று எனக்குத் தெரியவில்லை.

(06.04.1967 -ல் தில்லியில செய்தியாளர்களுக்கு அளித்த பேட்டியின் சுருக்கம்)

# பர்மா அரிசி

(12.04.1967 அன்று சென்னையில் செய்தியாளர்களுக்கு அளித்த பேட்டி)

பர்மாவிலிருந்து அகதிகளாக வெளியேறி வந்துள்ளவர்களுக்குப் பர்மா அரசு கொடுக்கவேண்டிய இழப்பீட்டைப் பெரும்பாலும் அரிசியாகவே கொடுக்க உரிய ஏற்பாடுகளைச் செய்யுமாறு மைய அரசிடம் வற்புறுத்தி வந்திருக்கிறேன்.

பர்மா அரசு நிலங்களை அரசுடைமை ஆக்கிய வகையில் ரூ.50கோடியும் நில உடைமைகளையும் நிறுவனங்களையும் அரசுடைமையாக்கிய வகையில் ரூ.50 கோடியும் இழப்பீடாகக் கொடுக்க வேண்டியுள்ளது.

பர்மா தன் அரிசி உற்பத்தியை மேலும் பெருக்கிக் கொள்ள இந்தியாவிலிருந்து வேளாண்மைத் தொழிலாளர்களை ஒப்பந்த அடிப்படையில் தருவித்துக் கொள்ள எம்.ஏ.ஓ.மூலம் பர்மிய அரசு அணுகலாம்.

எங்கெங்கு உணவுத் தானிய உற்பத்தியைப் பெருக்க முடியுமோ அங்கெல்லாம் உற்பத்தி செய்ய ஒவ்வொருவரும் அக்கறை காட்ட வேண்டும். பர்மாவில்கூட விதை விதைக்குங் காலங்களிலும் அறுவடைக்காலங்களிலும் வடக்கே இருந்து தொழிலாளர்கள் வருவதாக அறிந்தேன்.

ஒன்றுமே கிடைக்காது திண்டாடுகின்ற நிலையில் கூடுதல் விலை கொடுத்தேனும் பர்மா அரிசியை வாங்குவது மேல்.

(12.04.1967 அன்று சென்னையில் செய்தியாளர்களுக்கு அளித்த பேட்டியில் கூறியவை)

# நான்காம் ஐந்தாண்டுத் திட்டப் பணிகள்

(1968 எப்ரலில் சென்னைச் செய்தியாளர்களிடையயே கூறிய கருத்துகளின் சுருக்கம்)

தமிழ்நாட்டைப் பொறுத்தவரை வரிபோடுவதன் மூலம் மாநில அரசு நிதிவசதிகளைப் பெருக்கிக் கொள்வதில் ஏற்கனவே உச்சகட்டத்தை எட்டியாகிவிட்டது. ஆகவே, புதிய வரிகள் மூலம் மாநில அரசின் நிதி ஆதாரங்களைத் தேடுவதென்பது இயலாத செயல்.

மைய அரசு எந்த அடிப்படையில் மாநிலங்களுக்கு நிதி ஒதுக்க உத்தேசித்துள்ளது. மக்கள் தொகையின் அடிப்படையிலா அல்லது குறிப்பிட்ட மாநிலத்தின் பின்தங்கிய நிலையை வைத்துத் தலைகட்டுக்கு இத்தனை வரி போடப்பட்டுள்ளது என்னும் அளவை வைத்தா, அந்தந்த மாநிலத்துப் பெருநகரங்களின் தேவைகளை வைத்தா என்பதைத் தெளிவுபடுத்தவேண்டும்.

வறட்சிப் பகுதிகள் விஷயத்திலும் பஞ்ச நிவாரணப் பணிகளிலும் தனிக்கவனம் செலுத்த வற்புறுத்தப்பட்டது.

தமிழ்நாட்டின் நான்காம் திட்டத்தில் துவக்க இருக்கிற தொழில்கள் பற்றி விரைவில் முடிவாகும்.

வேளாண்மைக்கு நிலத்தடி நீரைப் பயன்படுத்துதல் கால்வாய்களை விரிவுபடுத்துதல், தஞ்சை மாவட்ட வடிகால் அமைப்பைச் சீரமைத்தல், குளத்துபபாசனம் உள்ள பகுதிகளில் குளங்களைத் தூரெடுத்தல், சென்னை நகரக் குடிநீர்ப் பிரச்சனையைத் தீர்த்தல், விரிவான சென்னை மாநகர அமைப்புத்திட்டத்தை மேற்கொள்ளுதல், கைத்தறி மற்றும் மூடிய மில்களின் பிரச்சினைக்குத் தீர்வு காணுதல், இலங்கையிலிருந்து குடிபெயர்ந்து வருவோரது மறுவாழ்வுக்கான திட்டங்களை அமலாக்குதல், படித்து வேலையில்லாது இருப்போர் பிரச்சினைக்குத் தீர்வு காணுதல் ஆகிய பணிகளே தமிழக அரசு நான்காம் ஐந்தாண்டுத் திட்டத்தில் நிறைவேற்ற விரும்புகிறது.

(1988 செப்டம்பரில் சென்னையில் திட்டக்குழுத் துணைத்தலைவர் விரிவாகக் கலந்துரையாடியபின் செய்தியாளர்களிடம் அண்ணா கூறியவை)

# ஒரே கட்சி ஆட்சி இந்தியாவுக்கு ஏற்றதல்ல

(20.04.1967 அன்று போஜனா இதழுக்கு அளித்த பேட்டியின் சுருக்கம்)

மூன்று கோரிக்கைகள்:
தனித் திராவிடநாடு கோரிக்கையைக் கைவிட்டபோதிலும், தன் மூன்று அடிப்படைக் கோரிக்கைகளைத் திமுக கைவிடவில்லை.

எங்களுடைய மொழியும் கலாச்சரமும் காப்பாற்றப்படவேண்டும். இந்தியக் கூட்டாட்சிக்குள் எங்கள் மாநிலத்திற்குரிய அரசியல் உரிமைகள் பாதுகாக்கப்படவேண்டும். எங்களுடைய பொருளாதார முன்னேற்றத்திற்கு உறுதி மொழி தேவை.

தனிநாடாகப் பிரிந்தால்தான் இத்தகு பாதுகாப்பு கிடைக்கும் என முதலில் நினைத்தோம். ஆனால், சீனப் படையெடுப்பிற்குப் பின் இந்தியாவின் ஒரு பகுதியாகச் செயல்படுவதன் அவசியத்தை உணர்ந்துகொண்டோம்.

ஆதரவுவேர்:
குறிப்பிட்ட தனியொரு கருத்தைப் பரப்பி அதனால் மட்டுமே

நாங்கள் பலம் தேடிக்கொண்டதாக நினைப்பது தவறு. எமக்குள்ள ஆதரவு மக்களிடையே ஆழமாக வேர் விட்டிருக்கிறது.

தொடர்புமொழி:

காலப்போக்கில் அனைத்திந்தியாவிற்கும் ஒரு பொதுத் தொடர்பு மொழி உருவாக வேண்டும். அதுவரை ஆங்கிலமே இணைப்பு மொழியாக நீடிக்கவேண்டும். 14 தேசிய மொழிகளுக்கும் சம மதிப்பு அளிக்கப்படவேண்டும்.

திட்டக்குழு:

இந்தியத் திட்டக்குழு மாநிலங்களிலும் பணியாற்றலாம். மாநிலத் திட்டங்களுக்கு ஆலோசனை கூறும் விதத்தில் திட்டக்குழு செயல்பட்டால், அதை நான் விரும்பி வரவேற்பேன். மாநிலங்களின் வளர்ச்சிக்குத் திட்டக்குழு பக்கபலமாக நின்று அதிக உதவிகளைச் செய்யவேண்டும். அது ஒரு கூட்டமைப்பாகச் செயல்பட வேண்டும். வெறும் திட்டப் பார்வையோடு மட்டுமின்றி மாநில நலத்திற்கான அக்கறைப் பார்வையோடும் மைய அரசு நிதி ஒதுக்குவதற்குத் திட்டக்குழு வழிவகை செய்யவேண்டும்.

திட்டம் வகுத்தல்:

தேசியத் திட்டங்களை வகுப்பதிலும் மாநில சட்டத்திட்டங்களை உருவாக்குவதிலும் மைய அரசின் பொறுப்புணர்ச்சியே தலைமையானது.

கட்டுப்பாடுகளுக்கு உட்படாத இந்த உணர்ச்சியோடு மாநில அரசுகள் தங்கள் திட்டங்களை உருவாக்கும் சூழ்நிலை அரும்பவேண்டும். அதற்கேற்ற வகையில் திட்டக்குழுவிலும் மைய அரசின் நிர்வாகத்திலும் மைய அரசுவயமாதல் என்னுங் கொள்கை பின்பற்றக் கூடாது.
மக்களின் விருப்பங்களைக் கண்டறிந்து அவற்றின் அடிப்படையில்தான் நாம் திட்டங்களை உருவாக்க வேண்டும். அப்போதுதான் நம் திட்டங்கள் நல்ல பயனை விளைவிக்கும். திட்டங்கள் முதலில் சிற்றூர்களில் வகுக்கப்படவேண்டும். பிறகு மாநில அரசு அவைகளைப் பரிசீலிக்க வேண்டும். இறுதியில்தான் மைய அரசு திட்ட அரங்கில் தன் பங்கை ஏற்க வேண்டும். சிற்றூர்களில் தொடங்கப்படும் முன்னேற்ற வேலைகளில் மாநில அரசுகள் ஈடுபட்டு உழைக்க வேண்டும்.

மோதலைத் தவிர்க்க:
மைய-மாநில அரசுக்குக்கிடையே நிலவும் கருத்து வேறுபாட்டினால் ஏற்படும் மோதல் தவிர்க்க முடியாததல்ல. மனம் விட்டுப் பேசுவதின் மூலம் கருத்து வேறுபாடுகளைப் போக்கிக் கொள்ள முடியும்.

ஒரே கட்சி ஆட்சி:
இந்தியாவிற்கு ஒரே கட்சி ஆட்சி ஏற்றதல்ல. ஒரு கூட்டாட்சியில் அந்தக் கூட்டாட்சியை வலியுறுத்தும் அரசியல் சட்டத்தின் கீழ் ஒரு

கட்சியாட்சியே எப்போதும் நடைபெறும் என்றும் எதிர்பார்க்க முடியாது.

இந்தியக் கூட்டாட்சிக்கு உட்பட்ட பல மாநிலங்களைப் பல்வேறு எதிர்க்கட்சிகள் ஆளும் சூழ்நிலை உருவாகிவிட்டது. பல மாநிலங்களில் கூட்டு அமைச்சரவைகள் ஏற்பட்டிருப்பதை இந்திய அரசியலின் இடைக்காலத்தில் ஏற்பட்ட நிகழ்ச்சி என்று நான் கருதுகிறேன்.

தொடர்பு வரை:

மைய மாநில அரசுகளின் தொடர்பு அதிகப்படுவதற்கு நான் எந்த திட்டத்தையும் கூற விரும்பவில்லை. ஆனால் அடிக்கடி கருத்து வேறுபாடுகள் பேசித் தீர்க்கப்படவேண்டும். பல முதலமைச்சர்கள் கூடிப் பேசுவதன் மூலம் ஒரு நிறுவனத்தின் ஆற்றலைப் பெறமுடியும். இத்தகைய நேரடித் தொடர்பு வெறும் அமைப்பு முறைகளைவிட சிறப்பானது.

(20.04.1967 அன்று போஜனா இதழுக்கு அளித்த பேட்டியின் சுருக்கம்)

# இலட்சிய அரசு

(1967-ஏப்ரலில் நேபன் செய்தியாளருக்கு அளித்த பேட்டி)

மைய அரசின் அதிகாரம் எங்கு முடிகிறது. மாநில அரசின் அதிகாரம் எங்குத் தொடங்குகிறது என்று நாம் முடிவு செய்தாக வேண்டும்.

இக்கட்டான இந்த விஷயத்தில் நான் மட்டும் தனித்து நிற்கவில்லை. மைய அரசு தன் இறக்கையை வெட்டுவது குறித்துக் கேரள அரசு குறிப்பிட்டுவிட்டது. மைசூரிலுள்ள காங்கிரஸ் முதலமைச்சர் மைய அரசின் தலையீட்டைப் பற்றிக் கசப்போடு குறை கூறியுள்ளார்.

வினா: இந்திரா காந்தியிடம் இவ்விஷயங்களை எடுத்துக் கூறும் நோக்கம் உண்டா?

இது குறித்து மக்களின் கருத்தை உருவாக்க முதலில் விரும்புகிறேன். அதன்பிறகுதான் இதில் மேற்கொண்டு செயலாற்ற முடியும்.

கல்வி போன்ற மாநிலத் துறைகளில் மைய அரசு சட்டமியற்றுவதும் முடிவெடுப்பதும் விரும்புதற்குரியவை அல்ல.

இந்த விஷயத்தில் மாநில அரசுகளின் முடிவே இறுதியாக இருக்கவேண்டும். நம் மக்களுக்கு எவ்வகையான கல்வி வேண்டும் என்பதை அவைதாம் முடிவு செய்யவேண்டும்.

உணவில் நெறிமுறைகளைத் தொடர்புப் படுத்தவேண்டாம். அமெரிக்காவில் மட்டுமே மிகுதியான கோதுமை இருந்து, அது நமக்கு உதவியளிக்குமானால் அமேரிக்காவின் அரசியல் எதுவாயினும், கோதுமையை நாம் அதனிடம் பெறத்தான் வேண்டும். ஆனால், ஒரே இடத்தைப் பெரிதும் நாம் நம்பி நிற்கலாகாது.

பர்மிய உணவு உபரிமீது நாம் கண்வைக்கவேண்டும். நாம் 10-15 ஆண்டு ஏற்பாட்டைச் செய்து கொண்டால் பர்மாவிலிருந்து அரிசி பெறமுடியும். இப்போது பர்மாவில் இருப்பதாக மதிப்பிடப்பட்டுள்ள இந்தியாவின் சொத்து மதிப்பாகிய சுமார் ரூ.100 கோடியைக் கொண்டு அங்கிருந்து அரிசி பெறலாம். புதுதில்லி இந்த ஏற்பாட்டுக்கு வர முனைந்து நிற்கவேண்டும்.

ஜூன் ஜூலையில் (1967) காங்கிரசல்லாத முதலமைச்சர்களை இங்கு வருமாறு அழைப்பது காங்கிரஸ் எதிர்ப்பு முயற்சியன்று. பொதுப் பிரச்சினைகளை ஆராய்ந்து அவற்றுக்குத் தீர்வு காணவே நாம் விரும்புகிறோம்.

மாநிலங்களுக்குச் சட்டப்படி சேர வேண்டிய துறைகளில் எல்லாம் மைய அரசு மெதுவாக நுழைவதை நாம் காண்கிறோம். மைய அரசு மட்டத்தில் பல முடிவுகளை எடுக்கும் இப்போக்கை நாம் ஒடுக்கியாகவேண்டும். இல்லையேல் மாநில அரசுகளின் தன்னாட்சி உரிமை முற்றிலும் மறைத்து ஒழிந்துவிடும்.

மாநிலங்களுக்கு உண்மையான தன்னாட்சி உரிமையை வழங்குவதற்காக மைய மாநில ஒருங்கிணைவான விஷயங்களில் மூன்று பட்டியல்களையும் ஆராய்ந்து, திருத்தியமைப்பதற்காக மைய அரசு உடனடியாக ஒரு வல்லுநர் குழு அமைக்க வேண்டும்.

மைய அமைச்சரவையானது உள்துறை, பாதுகாப்புத்துறை, அயலுறவுத்துறை முதலிய மூன்று துறைகளை மட்டும கவனித்துக் கொண்டு, எஞ்சிய துறைகளை மாநில அரசிடம் விட்டுவிட வேண்டும். நாங்கள் விரும்பும் இலட்சிய அரசு இதுதான்.

இன்றைய அரசியல் சட்டத்தின்படியே மைய அரசு நாட்டின் ஆட்சித் தலைமை உரிமையையும் ஒருமைப்பாட்டையும் நிலைநிறுத்துவதற்கு மட்டும வேண்டிய வகையில் பொறுப்பானதாய் இருக்கவேண்டும். இதர விஷயங்களை மாநில அரசுகளிடம் விட்டுவிட வேண்டும். சான்றாக, மாநிலங்களின் தொழில்களுக்கு மைய அரசு ஆண்டுதோறும் அயல்செலாவணியை வழங்கவேண்டும். நாங்கள் எம்மாநிலத்தில் தொழில்களைத்

தொடங்க விரும்பும்போது எல்லாம், ஒவ்வொரு முறையும் ஏன் புதுடில்லி செல்லவேண்டும?

(1967-ஏப்ரலில் நேபன் செய்தியாளருக்கு அளித்த பேட்டி)

# மும்மொழித் திட்டம்

(1968 பிப்ரவரி 3-ல் செய்தியாளரிடையே பேசியது)

வடக்கேயுள்ள சில இந்தி மாநிலங்கள் மும்மொழித் திட்டத்தை மனப்பூர்வமாக நடத்திவைக்கவில்லை. ஆங்கிலப் படிப்புக்குக்கூட அவை முக்கியத்துவம் தரவில்லை. இதன் விளைவாக அங்கே ஒரு மொழித் திட்டந்தான் அமல்நடக்கிறது.
தமிழகத்தின் மொழித் தீர்மானம் நாட்டில் நிச்சயம் பிரிவினை உணர்ச்சியை ஏற்படுத்தாது. ஆனால் இந்தி பேசாத மாநிலங்கள் மீது அவர்களுடைய விருப்பத்திற்கு மாறாக இந்தியைத் திணிப்பது பிரிவினைக்குத்தான் வழிவகுக்கும்.

வினா: தமிழக அரசாங்கம் மும்மொழித் திட்டத்தை கைவிட முடிவெடுத்துவிட்டதால் கல்விக்காகத் தமிழகத்துக்குக் கொடுக்கப்படும் மானியங்களைக் குறைக்க மைய அரசு எண்ணியிருப்பதாகச் செய்திகள் வந்துள்ளன. அவை பற்றித் தங்கள் கருத்தென்ன?

விடை: அது உண்மையாக இருந்தால் பத்திரிகைகள்தான் முன்வந்து அதை எதிர்க்க வேண்டும்.

(1968 பிப்ரவரி 3-ல் செய்தியாளரிடையே பேசியது)

# போப் சந்திப்பு

(1968 ஏப்ரல் 15 பாரிசில் செய்தியாளருக்கு அளித்த பேட்டியில் கூறியது)

வாடிகன் அரண்மனையில் போப்பாண்டவரைச் சந்தித்தேன். உலக அமைதிக்காக இந்திய சர்க்கார் எடுத்துவரும் முயற்சிகளுக்குப் போப் பாராட்டுத் தெரிவித்தால்.

சென்னையில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாடு மலர் ஒன்றை நான் போப் ஆண்டவருக்குப் பரிசாக வழங்கினேன்.

இங்கிலாந்து நாட்டிற்கு வருமாறும் எனக்கு அழைப்பு வந்தது என்றாலும் போதிய நேரிமின்மை காரணமாக இலண்டன் நகர் செல்லாமலேயே அமெரிக்கா செல்ல வேண்டியதாகிவிட்டது. அநேகமாக ஜுலை மாதத்தில் இலண்டன் பயணம் மேற்கொள்ள இயலும் என்று கருதுகிறேன்.

மொழிச் சிக்கல் போன்ற தகராறுக்குரிய பிரச்சினைகளை இன்னும் 25 ஆண்டுகளுக்கத் தள்ளிப் போடுவதுதான் இந்தியாவின் ஒற்றுமையைக் காக்கும வழி.

# அரிய அமெரிக்கப் பயணம்

(1968 ஏப்ரல் 15 முதல் மே 15 வரை அண்ணா அவர்கள்
ஒரு மாத கால அமெரிக்கப் பயணத்தை மேற்கொள்வதற்கு முன்
15.04.1968 அன்று சென்னையில் செய்தியாளருக்கு அளித்த
பேட்டியின்
முழுச் செய்தியின் விளக்கம்)

கேள்வி: தாங்கள் வெளிநாடு செல்வதில் முக்கிய நோக்கம் என்ன?

பதில்: என்னுடைய பயணத்தின் முக்கிய நோக்கம் பல்கலைக் கழகக் கல்வியும் தொழிலும் எம்முறையில் அங்கு நடைபெறுகின்றன என்பதைப் பார்ப்பதுதான்.

மேலும் அங்குக் கல்வித்துறையில் என்னென்ன வசதிகள் மாணவர்களுக்கும் ஆசிரியர்களுக்கும் தரப்படுகின்றன. ஆசிரியர்கட்கும் மாணவர்கட்குமுள்ள நட்புறவுகள் என்ன என்பனவற்றைக் கவனித்திடவும் ஆராய்ந்திடவும் எண்ணியிருக்கிறேன்.

கேள்வி: தங்கள் பயணத் திட்டம் என்ன?

பதில்: நான் யேல் பல்கலைக் கழகத்திற்குச் செல்ல இருக்கிறேன். அப்பல்கலைக்கழகத்திற்கு என்னை வருமாறு அந்நிறுவனத்தைச் சார்ந்தவர்கள் நான்கு மாதங்களுக்கு முன் அழைத்தார்கள். அப்பல்கலைக்கழகத்தில் ஐந்து நாட்கள் தங்குவேன். அங்கு நடைபெறும் கருத்தரங்குகளில் கலந்துகொள்வேன். அங்கு நான் சில சொற்பொழிவுகளையும் நிகழ்த்த இருக்கிறேன்.

நான் ஹாவாய்த் தீவுக்குச் செல்லுகையில் அங்குக் கிழக்கு - மேற்குக் கலாச்சார நிலையத்தில் பேச இருக்கிறேன்.

ரோம் நகரில் போப் அவர்களைச் சந்தித்துப் பேச இருக்கிறேன்.

பாரிசில் ஐ.நா.வின் கிளைக் கழகமான யுனெஸ்கோவில் தங்க இருக்கிறேன். அதன் பொதுச்செயலாளர் மால்கம் ஆதிசேஷய்யா ஒரு விருந்து தர இருக்கிறார். பாரிசில் அடுத்த உலகத் தமிழ் மாநாடு நடக்க இருக்கிறது. அதுபற்றியும் அவருடன் பேச்சுநடத்த இருக்கிறேன்.
நான் பல அமெரிக்க மாநிலங்களுக்குப் போவதாக இருக்கிறேன்.

எடுத்துக்காட்டாகக் கான்சாஸ் மாநிலத்திற்குச் செல்வது. அங்குள்ள வேளாண் ஆராய்ச்சிப் பண்ணையை நேரில் கண்டறிந்து, அதன் நுட்பங்கள் பலவற்றைத் தெரிந்து கொள்ள முயல்வேன்.

அமெரிக்க ஜெனரல் மோட்டார் தொழிற்சாலை நிர்வாகம் என்னை அங்கு வரும்படி அழைத்திருக்கிறது. அழைப்பை ஏற்றுக்கொண்டு அந்நிறுவனத்திற்குச் சென்று பார்வையிடுவேன். பெரிய மண்வாரி எந்திரங்களை உற்பத்தி செய்யும் மிகப் பெரிய நிறுவனங்களில் அதுவும் ஒன்றாகும். சென்னையில் மண்வாரி எந்திரம் அமைப்பதைப் பற்றி அந்நிறுவனத்துடன் பேச இருக்கிறேன். ஓர் இந்திய நிறுவனத்தின் கூட்டுறவில் அதனைத் தமிழ்நாட்டில் நடத்த இயலுமா என்பதைப் பற்றிப் பேசுவேன்.

ஜப்பானில்தங்கி இருக்கையில் சேலம் இரும்பாலைத் திட்டத்துக்கு உதவிபெறும் நிலை குறித்து அறிய முயலுவேன். அங்க ஐந்து நாட்கள் அரசு விருந்தினராக இருக்கும்பொழுது பல தொழில் நிறுவனங்களுக்கும் செல்ல இருக்கிறேன். இரும்பாலைத்திட்டம் மீன்பிடி படகுத் துறைத்திட்டம் தூத்துக்குடியில் வேதிஇயல் தொழிலுக்கு உதவி பெறுவது ஆகியவை குறித்தும் பேசுவேன்.

கேள்வி: தாங்கள் வெளிநாடு சென்றால் தொலைக்காட்சியில் பேட்டியையும் பத்திரிகையாளர் பேட்டியைய் ம் வேண்டாம் என்று சொன்னீர்களாமே?

அண்ணா: இதை உங்களுக்கு யார் சொன்னது?

செய்தியாளர்: சி.சுப்பிரமணியம் சொல்லியிருக்கிறார்.

அண்ணா: அவரிடமே நேரில் நேற்று நான் “உங்களுக்குத் தவறான தகவல் தரப்பட்டிருக்கிறது” என்று கூறிவிட்டேன். எங்குச் சென்றாலும் செய்தியாளர் பேட்டி என்பது தவிர்க்க முடியாதது ஆயிற்றே! நான் அதை வரவேற்பவனாயிற்றே.

கேள்வி: பம்பாயில் எவையேனு ம் நிகழ்ச்சிகள் உண்டா?

பதில்: பம்பாயில் பொதுக்கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். போதிய காலம் இல்லாததால் வேண்டாம் என்று கூறிவிட்டேன். எனினும், மராட்டிய ஆளுநர் செரியனின் விருந்தினராகச் சில மணிநேரம் தங்க இருக்கிறேன்.

கேள்வி: தலைமை அமைச்சர் கூறியதென்று இந்தியாவின் வெளிநாட்டுக் கொள்கையைப் பற்றி என்ன கூற இருக்கிறீர்கள்?

பதில்: நான் சில நாட்களுக்கு முன் தலைமை அமைச்சர் இந்திராவிற்கு இதுபற்றி ஒரு கடிதம் எழுதினேன். எங்களுக்கும் இந்திய அரசினருக்கும் வெளிநாட்டுகு கொள்கையைப் பொறுத்தவரையில் ஏறத்தாழ பொதுவான கருத்தொற்றுமை இருக்கிறது. பல நாட்டுப் பிரச்சினைகள் பற்றி அரசாங்கத்தின் கருத்தை அறிய விரும்புகிறேன் என்று அக்கடிதத்தில் எழுதி இருந்தேன்.

அந்தக் கடிதத்திற்குத் தலைமை அமைச்சர் பதில் எழுதி இருந்தார். சில நாட்டுப் பிரச்சினைகள் பற்றிய யோசனைகளையும் கருத்துகளையும் தெரிவித்தார். பிறநாட்டுக்கும் நம் நாட்டுக்கும் உள்ள உறவுமுறை பற்றியும் விவரமாக எழுதி இருந்தார்.

கேள்வி: கூட்டுச் சேரா கொள்கைப் பற்றி இந்திரா குறிப்பிட்டிருந்தாரா?

பதில்: அவருடைய கடித்தத்தின் முதல் வாசகமே அந்தச் சொல்லிலிருந்துதான் துவங்குகிறது.

கேள்வி: அமெரிக்காவில் வியட்நாம் பற்றிக் கேட்பார்களே!

பதில்: அமெரிக்காவிலேயே வியட்சாம் பிரச்சினை இருப்பதாக உணரப்படுகிறது. இந்தப் பிரச்சினை பற்றி இந்திய அரசு கருத்துத் தெரிவிக்கிறது. வியட்நாம் பிரச்சினைக்கு இராணுவத் தீர்வு கூடாது என்பது நம் கருத்து. அமெரிக்கக் குடியரசுத் தலைவரே அமைதிப் பேச்சுகளைத் துவங்க முன்முயற்சி எடுத்துவருகிறார். அமைதிப் பேச்சவார்த்தைகளுக்கான முன்முயற்சியை அமெரிக்கக் குடியரசுத்தலைவர் ஜான்சன் மேற்கொண்டுள்ள தருணத்தில், நாம் அமெரிக்கா செல்வது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன்.

கேள்வி: தாங்கள் வெளிநாட்டில் இருக்கும்பொழுது, இங்கு தற்காலிக முதலமைச்சர் என்று யாரையாவது அமர்த்தி

இருக்கிறீர்களா?

பதில்: அப்படி ஏதும் இல்லை. ஆனால் அதற்குப்பதிலாக எங்களுக்குள் சில மரபுகள் இருக்கின்றன. அவற்றின்படி நடப்போம்.

கேள்வி: தாங்கள் அமெரிக்காவிற்கு என்னென்ன பரிசுப்பொருள் கொண்டு செல்கிறீர்கள்?

பதில்: ஆங்கிலத் திருக்குறள், தொல்காப்பியம், கருணாநிதி எழுதிய சிலப்பதிகாரம், வேலைப்பாடுமிக்க மரப்பொருள்கள், காஞ்சிபுரம் பட்டுக் கைக்குட்டைகள், நாகரிகப் பாணியில் தலையை மூடும் சிறிய குட்டைகள் இவற்றை கொண்டுசெல்கிறேன்.

பதில்: திண்ணமாக நம் நாட்டின் பெருமையை, சிறப்பை உயர்த்தும முறையில்தான் நடந்துகொள்வேன்.

கேள்வி: வெளிநாட்டுக்கு தாங்கள் எந்த உடையில் செல்வீர்கள்?

பதில்: சாதாரண உடையில்தான். சில மாநிலங்களில் குளிர் இருப்பதால் வெப்பந்தரும் உடைகளைக் கொண்டு செல்கிறேன்.

கேள்வி: தாங்கள் வேற்றுமையில் ஒற்றுமை காண விரும்புகிறீர்கள். அதை எப்படி வெளிநாட்டில் விளக்குவீர்கள்?

பதில்: மொழிப் பிரச்சினை கருத்து வேற்றுமைக்குரியது. அதை விளக்க வேண்டிவந்தாலும், நம் நாட்டின் உயர்விற்கு உட்பட்ட எல்லையில் அதை விளக்குவேன்.

ஒரு கூட்டாட்சி அமைப்பு காண நாங்கள் உழைத்துவருகிறோம் என்பதையும் கடந்த 20 ஆண்டுகளாக நம் பட்டறிவில் சில மாறுதல்களின் தேவை உணரப்பட்டுள்ளது என்பது பற்றியும் நான் அமெரிக்கர்களுக்கு எடுத்துக் கூறுவேன். மைய அரசு மாநில அரசுக்கும் இடையே நிதி மற்றும் அதிகாரம் ஆகியவற்றில் உள்ள பங்கு பற்றியும் நான் விளக்க இருக்கிறேன்.

என் கட்சி வரலாறு பற்றி அவர்கள் கேட்டால் நான் என் கட்சிப் பிரிவினை பற்றிப் பேசியதையும் அந்தப் பிரச்சினையைக் கைவிட்டு விட்டதையும் அதன் பிறகு ஒற்றுமைக்காகப் பாடுபடுவதையும் அந்த ஒற்றுமை வலுப்படுவதற்குச் சில கருத்தேற்றங்களையும் எடுத்துரைப்பேன்.

கேள்வி: மதுரையில் தமிழர் படை அமைத்திருக்றார்கள் என்ற செய்தி வந்திருக்கிறதே, அதுபற்றி உங்கள் கருத்தென்ன?

பதில்: அதன் முழு விவரம் எனக்குத் தெரியாது. அது ஒரு தொண்டர் படை, சேனைப்படை என்பதெல்லாம் அந்தப் பொருள் தருவதால். சாந்தி சேனை என்று கூட வினோபாவேவைச்

சார்ந்தவர்கள் அமைத்திருக்கிறார்கள். மேலும், இது உள்ளூர்ப் பிரச்சினை. அரசியல் செயல் முறையோ கட்சிச் செயல்முறையோ இதில் ஏதுமில்லை. கட்சிக்கும் அதற்கும் தொடர்பில்லை. அந்த அமைப்பு தவறான வழியில் போனால், உறுதியாக அதைத் தடுத்து நிறுத்துவேன். ஏனெனில், அதில் ஈடுபட்டவர் கட்சியில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்கள்.

இந்தப் படை அமைப்பிற்கும் மாணவர் நடவடிக்கைக்கும் ஏதும் தொடர்பில்லை. அப்படி ஏதாவது தவறாக நடக்குமென்றால் அந்த அமைப்பைக் கலைக்க ஆணையிடுவேன். திமுகவோ இந்த அரசாங்கமோ இதுபோன்ற அமைப்பின் தயவில் இருக்கவேண்டிய கட்டாயம் இல்லை. தேவையுமில்லை.

கேள்வி: அண்மையில் நடந்த சென்னை நிகழ்ச்சிகளுக்கு நான் அதிகாரத்தில் இருந்தால் உயர்நீதிபதியை விசாரிக்கும்படி உத்தரவிட்டிருப்பேன் என்று சுப்பிரமணியம் பேசி இருக்கிறாரே?

பதில்: திருப்பி அவரை நான் கேட்கிறேன், அவர் அதிகாரத்தில் இருந்தபோது முதுகுளத்தூர் கலவரம் பற்றி விசாரிக்க யாரை நியமித்தார்? சென்னை துறைமுகத் துப்பாக்கிப் பிரயோகத்தின் போது யாரை நியமித்தார்? அண்ணாமலை நகரில் மாணவன் சுடப்பட்டபோது யாரை நியமித்தார்? தில்லியில் சாமியார்கள் கலகம் நடந்து காமராசர் வீடு எரிக்கப்பட்டபோது எப்படிப் பட்ட நீதி

விசாரணை நடந்தது? சுப்பிரமணியம் அதிகாரத்திலிருந்தபோது அருமையான சந்தர்பங்கள் கிடைத்தபோது அவர் என்ன செய்தார்?

இராஜாஜி அவர்கள் கூட நான் விஷயத்தை எடுத்து விளக்கியபின், இப்போது செய்யப்பட்டுள்ள ஏற்பாடுபற்றி முழு மனநிறைவு தெரிவித்திருக்கிறார்.

நான் அந்த நிகழ்ச்சிகள் நடந்தபின் பேசாமலிருந்தால, நீதிவிசாரனை தேவை என்று கோரியிருப்பார்கள். அதுபற்றி எந்தக் கோரிக்கையும் வருவதற்கு முன்பே நானாகவே நீதிவிசாரனை பற்றி அறிவித்ததால், ஏன் உயர்நீதி மன்ற நீதிபதியை நியமிக்கவில்லை என்று கேட்கிறார்கள்.

ஆழ்ந்த ஆலோசனைக்குப் பிறகே அமெரிக்கப் பயணத்தை மேற்கொண்டேன். நான் ஒரு மாத காலம் வெளிநாட்டில் இருக்கும்பொழுது என் அமைசரவையிலுள்ள தோழர்கள் நிர்வாகத்தை நல்ல முறையில் நடத்துவதாக எனக்கு வாக்களித்துள்ளனர். அவர்கள் திறமையில் எனக்கு அசைக்க முடியாத நம்பிக்கை இருக்கிறது.

நான் வெளிநாட்டில் இருக்கும்பொழுது இங்கு எப்போதும் போல் நல்ல முறையில் விவகாரங்கள் நடந்து வரும் என்பதில் நான் மிகுந்த நம்பிக்கை கொண்டிருக்கிறேன்.

என்னுடைய தோழர்களுக்கு நல்ல முறையில் ஒத்துழைப்பு தர வேண்டும் என்று அனைத்துக் கட்சித் தோழர்களையும் கேட்டுக்கொள்கிறேன்.

சிறப்பான வேண்டுகோள் ஒன்று பத்திரிகையாளர்களுக்கு விடுக்கிறேன். என் வெளிநாட்டுப் பயணத்தின்போது என் தோழர்களுக்கு ஒத்துழைப்பு தரவேண்டும் என்று பத்திரியாளர்களைக் கேட்டுக்கொள்கிறேன். என் அமைச்சரவைத் தோழர்கள் மீதுள்ள நம்பிக்கையின் பேரில்தான் நான் வெளிநாட்டில் மகிழ்ச்சியாக இருக்கப் போகிறேன்.

நான் வெளிநாடு சென்றாலும் என் அமைச்சரவைத் தோழர்களுடன் அடிக்கடி தொடர்பு கொண்டிருப்பேன்

(1968 ஏப்ரல் 15 முதல் மே 15 வரை அண்ணா அவர்கள் ஒரு மாத கால அமெரிக்கப் பயணத்தை மேற்கொள்வதற்கு முன் 15.04.1968 அன்று சென்னையில் செய்தியாளருக்கு அளித்த பேட்டியின் முழுச் செய்தியின் விளக்கம்)

# அனைவரும் விரும்பிய பேட்டி

(22.04.1968 அன்று யேல் பல்கலைக்கழகத்தில் பன்னாட்டுச் செய்தியாளர்களுக்கு
அண்ணா அளித்த அருமையான பேட்டி)

செய்தியாளர்: தங்களைக் காந்தியுடனும், கென்னடியுடனும் ஒப்பிட விரும்புகிறேன்.

அண்ணா: என்னை மிகப் பெரிய மனிதர்களுடன் ஒப்பிட்டுப் பேசுவதாக அஞ்சுகிறேன்.

செய்தியாளர்: அமெரிக்கக் குடியரசுத் தலைவர் தேர்தலுக்குப் போட்டியிடவிருக்கும் ராபர்ட் கென்னடி, மக்கார்த்தி ஆகிய இருவரில் யாரை நீங்கள் ஆதரிக்கிறீர்கள்? யார் குடியரசுத் தலைவராக வருவதை விரும்புகிறீர்கள்?

அண்ணா: இந்தியாவிற்கு யார் அதிக உதவி தருவாரோ அவரைத்தான் ஆதரிப்பேன்.

செய்தியாளர்: அமெரிக்க உள் விவகாரம், வியட்நாம் பிரச்சினை, மேற்காசிய பிரச்சினைப் பற்றித் தங்கள் கருத்தென்ன?

அண்ணா: இவை சர்ச்சைக்குரிய விஷயங்கள் அவை பற்றிக் கருத்து தெரிவிப்பதற்கில்லை.

செய்தியானர்: இந்திய வெளிநாட்டுக் கொள்கை தகராறு பற்றித் தங்கள் கருத்தென்ன?

அண்ணா: அது மைய அரசைப் பொறுத்த விவகாரம் அதில் தலையிட விரும்பவில்லை.

செய்தியாளர்: சீனாவுடன் இந்தியாவுக்குள்ள மோதல் காரணமாகத்தான் இந்தியா மேலைநாடுகளின் பக்கம் சாய்கிறதா?

அண்ணா: முன்னர் இந்தியா ஒரே கட்சி ஆட்சியில் இருந்தது என்பதை உணர்ந்து கொள்ளவேண்டும். ஆனால், பல மாநிலங்கள் காங்கிரசல்லாத நிலையில், நான்காம் ஐந்தாண்டுத் திட்டம் துவக்கப்பட்ட நிலையில் வறட்சியின் காரணமாகத் தொழிலில் மந்த நிலை நிலவிய நிலையில் இந்திராகாந்தி பதவிக்கு வந்தார். இவற்றை எல்லாம் பார்க்கும்பொழுது அவர் நன்றாகவும் திறமையாகவும்தான் செயல்படுகிறார்.

அவர் அவசரப்பட்டு முடிவு எடுத்திருக்கக் கூடாது என்று நான் கருதுகிற பிரச்சினை மொழிப் பிரச்சினை ஒன்றுதான்.

நேருவின் வாக்குறுதியைச் சட்டமாக்க முனைந்தமைக்காக நாங்கள் நன்றி செலுத்துகிறோம். ஆனால், அதே வேளையில் இந்திக்கு ஆதரவாக இந்திரா மற்றொரு தீர்மானத்தையும் நிறைவேற்றிவிட்டார். மைய அரசின் வேலை வாய்ப்புத் துறையில் மொழித் தீர்மானம் இந்தி பேசுவோருக்கே சாதகமாயிருக்கிறது.

செய்தியாளர்: சீன ஆக்கிரமிப்பு நிலை எப்படியுள்ளது?

அண்ணா: சீனா முன்னர் இந்தியாவில் விழுங்கிய பகுதிகளை இன்னும் தன் வசமே அப்படியே வைத்துள்ளது. அண்மையில் அது முன்னேறாவிடினும், நாங்கள் எப்பொழுதும் முன்னேறாவிடினும், நாங்கள் எப்பொழுதும் எச்சரிக்கையாக இருக்கிறோம். அதன் வலுத்தாக்கல் வென்றுவிடாதபடி பார்த்துக்கொள்கிறோம்.

செய்தியாளர்: இஸ்ரேலுக்கு எதிராக இந்தியா உள்ளதா?

அண்ணா: இந்தியா இஸ்ரேலுக்கு எதிராக உள்ளது என்னும் பொதுவான ஓர் எண்ணம் நிலவுகிறது என்றாலும், அதை நான் மறுக்கிறேன். இந்தியா இஸ்ரேலுடன் ஓரளவு அரசியல் உறவுகளை வைத்துள்ளது. அரபு நாடுகளுடன் எங்கள் தொடர்பு மிக நீண்ட

காலமாக இருந்து வருகிறது என்ற போதிலும் இஸ்ரேலுக்கு எதிராக நாங்கள் எதையும் சொல்லவில்லை.

செய்தியாளர்: உலக அரங்கில் இந்தியாவின் பங்கென்ன?

அண்ணா: இந்தியாவிற்கு உள்நாட்டிலேயே பல சொந்தச் சிக்கல்கள் உள்ளன. எனவே, அனைத்து நாட்டு விவகாரங்களில் பெரும் பங்கு எதையேனும் வகிப்பது என்பது இந்தியாவுக்கு இயலும் என நான் நினைக்கவில்லை. ஆனால், ஒரு நாட்டுக்கும் மற்றொரு நாட்டுக்குமிடையே நடுவராக அமைதியையும் தோழமையையும் உண்டாக்கும் தூதுவராக நாங்கள் பணியாற்ற முடியும்.

செய்தியாளர்: மாணவர் ஆற்றல் பற்றியும் அரசியலில் அவர்கள் பங்கு கொள்வது பற்றியும் தங்கள் கருத்தென்ன?

அண்ணா: மாணவர் கிளர்ச்சி என்பது உலகெங்குமுள்ள காட்சியாகும். அரசாங்கத்திற்கு ஆதரவாகச் சில செயல்களை மாணவர்கள் செய்யும்பொழுது பாராட்டப்படுகிறார்கள். ஆனால் அரசாங்கத்திற்கு எதிராகக் கிளர்ச்சி செய்தால் அரசியலில் கலந்துகொள்ளாதீர்கள் என்று உடனடியாக அவர்கட்கு அறிவுரை வழங்கப்படுகிறது.

இந்தியாவில் மாணவர்கள் பாகிஸ்தானுக்கோ சீனாவுக்கோ எதிராக ஆர்பாட்டம் செய்கையில் அவர்களது பேராசிரியர்கள் கூட அவர்களைத் தட்டிக் கொடுத்துப் பாராட்டுகிறார்கள். ஆனால், மொழிச் சிக்கலுக்கு எதிராக அவர்கள் கிளர்ச்சி செய்யும்பொழுது, அரசியலைவிட்டுப் போகும்படி அவர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

செய்தியாளர்: இந்தியாவின் மைய மாநில அரசுகள் தொடர்பு, நிதி ஒதுக்கீடு முதலியவை பற்றித் தங்கள் பட்டறிவு என்ன?

அண்ணா: மைய அரசுகளும் மாநில அரசுகளுக்குமிடையேயுள்ள உறவு, மாநிலங்களுக்கு மைய அரசு நிதி ஒதுக்கீடு ஆகியவை தொடர்பாக எனக்குக் கடந்த 20 ஆண்டுகளில் போதுமான பட்டறிவு ஏற்பட்டுள்ளது. அரசியல் சட்டத்தை மறு ஆய்வு செய்ய ஒரு குழுவை ஏற்படுத்த நான் வற்புறுத்தியுள்ளேன். கடந்த 20 ஆண்டுக்காலப் பட்டறிவை மனத்தில் கொண்டு அக்குழு ஆராயலாம்.

தமிழக அரசு ரூ.100 கோடி மதிப்பீட்டில் ஒரு திட்டத்தை மைய அரசுக்கு அனுப்பியது. அத்தொகை அதிகம் என்று மைய அரசு கூறியதால், அதை ரூ.90 கோடியாகக் குறைத்தோம். அதன் பிறகு மைய அரசினரோ நீங்கள் ரூ.90 கோடிக்கோ ரூ.100 கோடிக்கோ திட்டத்தை வைத்துக் கொள்ளலாம். ஆனால் நாங்கள் ரூ.50

கோடிதான் கொடுப்போம். எஞ்சிய தொகையை நீங்களே தேடிக் கொள்ள வேண்டும் என்று கூறிவிட்டனர்.

தமிழகத்தில் காங்கிரசல்லாத ஆட்சி நடக்கிறது என்பதால் குறைவான நிதி ஒதுக்கீடு என்று கூறுவதற்கில்லை. காங்கிரஸ் கட்சி இருந்தபோது கூட அதன் திட்டம் மைய அரசால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை.

நிதி ஒதுக்குவதில் மாநிலங்களில் மக்கள் தொகையை மட்டுமன்றித் தேவையையும் மைய அரசு கருத்தில் கொள்ள வேண்டும்.

செய்தியாளர்: தங்கள் இருமொழிக் கொள்கை பற்றி…

அண்ணா: சில ஆண்டுகளுக்கு முன்பும் மும்மொழித் திட்டத்தை வைத்துக் கொள்வது என்று மாநிலங்கள் ஒப்புக் கொண்டன. தமிழ்நாடு அத்திட்டத்தைச் செயல்படுத்தியது. ஆனால், இந்தி பேசும் மாநிலங்கள் செயல்படுத்தவில்லை. தமிழகம் தவிரக் கேரளத்தி லும் இருமொழித் திட்டத்திற்குக் குறிப்பிட்ட ஆதரவு காணப்படுகிறது.

செய்தியாளர்: உணவு உற்பத்தியைப் பெருக்க என்ன நடவடிக்கைகளை மேற்கொள்கிறீர்கள்.

அண்ணா: உணவு தானிய விளைச்சலைப் பெருக்குவதற்காக மேம்படுத்தப்பட்ட விதைகள், கூடுதலான வேதி உரம், அதிகப்படியான கடன் வசதி ஆகியவை அளிக்கப்படுகின்றன.

இந்தியாவில் மொத்த உணவு உற்பத்தி, வளர்ந்துவரும் மக்கள் தொகைப் பெருக்கத்திற்குப்போதுமானதாக இல்லை. இந்தியாவில் நிலத்தைச் சமூக உடைமையாக்கும திட்டம் தேல்வியடைந்துவிட்டது. மக்கள் அதை விரும்பக்கூடும். ஆனால், நடைமுறையில் கூட்டுறவுப் பண்ணை வேலை செய்யவில்லை.

செய்தியாளர்: வேலை வாய்ப்புப் பற்றிய நிலை என்ன?

அண்ணா: நான்காம் ஐந்தாண்டுத் திட்டம் இறுதியாக்கப்பட்டுவிட்டால், பொறியாளருக்கும் தொழில்நுணுக்க வினைஞர்களுக்கும் அதிக வேலை வாய்ப்புண்டு.

செய்தியாளர்: வியட்நாம் பிரச்சனை பற்றித் தங்கள் கருத்தென்ன?

அண்ணா: வியட்நாமைப் பற்றி ஏதும் பேசுவதைவிட எவையேனும் சிலவற்றை செய்வது நல்லது என்ற நிலையை நீங்கள் அடைந்திருக்கிறீர்கள்.

வியட்நாம் அமைதிப் பேச்சுவார்த்தைக்குத் தில்லி களமாக அமைவதைப் பெரிதும் விரும்புகிறேன். தில்லி வெப்பமாக இருக்குமென்று அமெரிக்கா, விட்நாம் ஆகிய இருநாடுகளும் கருதுமானால், அதைவிடக் குளுமையான இடத்தைத் தமிழகத்தில் தேடித்தர நான் ஆயத்தமாக இருக்கிறேன்.

எந்த இடத்தில் பேச்சுவார்த்தை நடத்துவது என இடத்தின் பெயரைச் சொல்வதில் இரு தரப்பும் தவறு செய்துவிட்டன. ஒவ்வொரு தரப்பும் இன்னின்ன இடத்தில் நடத்தலாம் என எண்ணுவதற்குப் பதிலாக ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்துக் கூறுங்கள் என்று அவர்கள் ஐ.நா. தலைமைச் செயலாளர் ஊ-தாண்டைத் கேட்டிருக்கவேண்டும். அதை இரு தரப்பும் ஏற்றிருக்க வேண்டும்.

செய்தியாளர்: அமெரிக்கா வியட்நாமில் இருப்பதற்கு எதிராகப் பொதுமக்கள் கருத்து இந்தியாவில் வலுவாக உள்ளதா?

அண்ணா: பொதுவாக அமெரிக்கா போன்ற நட்பு நாடுகளின் செயல்கள் பற்றி நாங்கள் கடுமையான கருத்துகளை கூறுவதில்லை.

செய்தினாளர்: இந்தியாவின் காஷ்மீர்க் கொள்கையிலும் பாதுகாபப்புத் துறை, வரவு செலவுத் திட்டத்திலும் மாற்றம் ஏற்பட வழிவகை உண்டா?

அண்ணா: வெளிவிவகாரங்களில் முனைப்பு காட்டுவதோ வழிகாட்டுந்துறையில் பங்கு எற்பதோ மைய அரசின் கையில் இருக்கிறது. மாநிலங்களிடம் இல்லை. என் தனிப்பட்ட கருத்துகளும் சர்ச்சைக்குரியவை ஆகா. மைய அரசின் கருத்துகளும் அவற்றில் குழப்பம் அடைவதற்கில்லை.

செய்தியாளர்: பொதுவுடைமைப் படை எடுப்பால் இந்தியாவில் அபாயமுள்ளதா?

அண்ணா: அபாயமிருப்பதாக நான் கருதவில்லை. பொதுவுடைமை இந்தியாவில் பரவ வழியுண்டு. ஏனேனில், இங்கே வறுமையும் வேலையில்லாத் திண்டாட்டமும் பிற்படுத்தப்பட்ட நிலைமையும் எப்போதும் உள்ளன.

செய்தியாளர்: இந்தியாவில் பஞ்சம் எற்பட வாய்ப்புண்டா?

அண்ணா: இல்லை. கடந்த ஆண்டில் (1967) வறட்சியால் இந்தியா வருந்தியது. பீகாரில் பஞ்ச நிலை நிலவியது. ஆனால் இந்த ஆண்டில் நல்ல மழை பெய்துள்ளது. எனினும் இந்தியாவில் ஒட்டு மொத்தமாக உணவுப்பற்றாக்குறை உள்ளது.

செய்தியாளர்: குடும்பக் கட்டுப்பாடு எந்த அளவில் உள்ளது?

அண்ணா: வேளாண்மைத்துறையைச் சீர்திருத்தவும் குடும்பக் கட்டுப்பாட்டை ஊக்குவிக்கவும் பெரும் முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றன. ஆனால், தமிழகமும் மராட்டியமும் குடும்பக் கட்டுப்பாட்டில் முன்னேறியிருக்கின்ற வேளையில், உத்தரப்பிரதேசத்திலும் மத்திதயப் பிரதேசத்திலும் பீகாரிலும் வேறு சில மாநிலங்களிலும் பெரும் முன்னேற்றம் எதுவும் காணப்படவில்லை.

செய்தியாளர்: அந்நிய உதவியின் தாக்கம் என்ன?

அண்ணா: திட்டமிடல் மூலம் பொருளாதாராத் துறையில் தன்னைத்தானே உருவாக்கிக் கொள்ள இந்தியா முயன்று வருகிறது. ஆனாலும் பெருமளவு உதவி தேவைப்படுகிறது. அந்நிய உதவி இல்லாவிட்டால் இந்தியாவில் திட்டம் இவ்வளவு பெரியதாக இராது. அமெரிக்கர் தாராளமாக உதவி செய்ய வேண்டும். அது உதவியளிப்பதானது மற்ற நாடுகளிலிருந்து உதவி கிடைப்பதற்கு வழிகோலுவதாகும்.

செய்தியாளர்: இந்தியாவின் அணுக் கொள்கை என்ன?

அண்ணா: அணு ஆற்றலை அமைதிப்பணிகளுக்கு மட்டுமே பயன்படுத்துவது என்பதுதான் இந்திய அரசின் கொள்கை. அணுகுண்டு தயாரிப்பது அல்ல.

அணு ஆற்றலை ஆக்க வேலைகளுக்குப் பயன்படுத்தும் அளவுக்கு முன்னேற்றம் அடைந்து விட்டதாக எங்கள் விஞ்ஞானிகள் கூறுகின்றனர்.

இப்போது எங்கள் நாடாளுமன்றத்தில் அவ்வப்போது சில உறுப்பினர்கள் அணுக்குண்டுகளைத் தயார்க்கவேண்டும் என்று பேசுகின்றனர். ஆனால் அதை அரசாங்கம் அவசியமென்றோ இயலக்கூடியதென்றோ நினைக்கவில்லை. ஏனெனில், இந்தப் போட்டியில் இறங்க நாங்கள் விரும்பவில்லை. ஆனால் ஆக்க வேலைகளுக்கு மட்டும் அணு ஆற்றலைப் பயன்படுத்த விரும்புகிறோம்.

(22.04.1968 அன்று யேல் பல்கலைக்கழகத்தில் பன்னாட்டுச் செய்தியாளர்களுக்கு அண்ணா அளித்த அருமையான பேட்டி நாற்பது நிமட அளவு நடைபெற்றது. செய்தியாளர் பல்வேறு பிரச்சினைகளையும் உள்ளடக்கி, அறிவுக்கூர்மையாக அண்ணா அவர்களை மடக்கினாலும், அண்ணா அவர்கள் தமக்கே உரியதான தனித் திறமையில் செய்தியாளர்களை வாயடைக்கச் செய்து அவர்களை வியப்பிலும் திகைப்பிலும் ஆழ்த்தினார்.

இது குறித்து யேல் பல்கலைக் கழகச் செய்தி மடல் கூறுவதாவது: முதலமைச்சர் அவர்கள் நகைச்சுவையும் இளைஞர்களிடையே அவர் தாராளமாகப் பழகியதும் மனம் விட்டுப் பேசுவதற்குத் தங்க

தடையில்லாத சூழ்நிலையை அளித்தன. எல்லாக் கேட்ளவிகளுக்கும் பொறுப்புடன் பதில் அளித்தார். வெளிப்படையாக கருத்துத் தெரிவித்தார். இது குறித்து மாணவர்களும் செய்தியாளர்களும் மகிழ்ச்சியடைந்தனர். பல முறை அவர் இளைஞர்களை வாய்விட்டு சிரித்து மகிழுமாறு செய்தார். சான்று:மாணவர் செயல்கள் தங்களுக்குப் பிடித்திருந்தால் அவர்களை அரசியல்வாதிகள் தட்டிக் கொடுக்கின்றனர் என்றும், பிடிக்காவிட்டால் பேச்சுமூச்சு இல்லாமல் நழுவிவிடுவார்கள் என்றும் முதலமைச்சர் குறிப்பிட்டபோது அனைவரும் விழுந்து விழுந்து சிரித்தனர்.)

# கூட்டு அமைச்சரவை

(25.04.1968 அன்று அமெரிக்க நியூகேவனில் செய்தியாளர் ஒருவருக்கு அளித்த பேட்டி)

கட்சி பாகுபாடற்ற அரசியலை ஆதரித்தால், மைய அரசில் கொள்கையற்ற ஒரு குழப்பநிலை உருவாகும் அல்லது சர்வாதிகார நாடுகளில் உள்ள நிலை ஏற்பட்டுவிடும்.

காங்கிரஸ் அமைக்கும் கூட்டாட்சியில் சுதந்திராக் கட்சியைச் சேர்த்துக் கொண்டால் சோஷலிஸ்டுகள் அதில் சேர மாட்டார்கள். சோஷலிஸ்டுகள் ஒதுங்கிவிடுவார்கள். எனவே மைய அரசில் எல்லாக் கட்சிப் பிரதிநிதிகளையும் கொண்ட ஒரு தேசிய அரசு அமைக்கும் வாய்ப்பு தற்போதைக்கு இல்லை.

காட்டாக, அண்மையில் கட்ச் பற்றி நடந்த விவாதத்தை கூறலாம் கட்ச் தீர்ப்பைச் சில அரசியல் கட்சிகள் ஏற்றன. மற்றவை ஏற்கவில்ல். திமுகவும் மற்றும் சில எதிர்க்கட்சிகளும் அதை ஆதரித்தன. சுதந்திரக் கட்சி அதை ஆதரிக்கவில்லை. அதேபோல அப்துல்லா பற்றிக் கொள்கையளவில் ஜனசங்கமும் ச.கோவும் காங்கிரசுடன் சேர மறுத்துவிட்டன.

மாநில மட்டத்திலும் கட்சி பாகுபாடற்ற அல்லது அனைத்துக் கட்சி அரசு அமைப்பது கடினமே. காட்டாகத் தமிழகத்தில் காங்கிரசும் திமுகவும் சேர்ந்து கூட்டாட்சி அமைப்பதாக வைத்துக் கொள்வேம். அதன் பின்னர் காங்கிரசோ திமுகவோ என்ன சொல்லி மக்களிடம் வாக்கு கேட்க இயலும்? எந்த அடிப்படையில் மக்களிடயே ஆதரவைக் கோர முடியும்?

ஒரு குறிப்பிட்ட வேலைத் திட்டத்தின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படுகிறோம். இதனால் அதைக் கைவிடமுடியாது. ஆனால் மாநில மட்டத்தில் எல்லா எதிர்க்கட்சிகளையும் சேர்த்துக் கொண்டு அரசியல் கட்சிகள் கூட்டு ஒன்றை உருவாக்கலாம். ஜெயப்பிரகாஷ் போன்ற உயர்நிலையில் உள்ள ஒருவர்தான் இதைச் செய்ய முடியும். ஆனால், இதற்கு ஜெயப்பிரகாஷ் இன்னும் நேரடியாக அரசியலில் இறங்க வேண்டும்.

(25.04.1968 அன்று அமெரிக்க நியூகேவனில் செய்தியாளர் ஒருவருக்கு அளித்த பேட்டி)

# ஆவலும் ஆர்வமும்

(27.04.1968 அன்று யேல் பல்கலைக்கழகத்தில் அண்ணா அளித்த வானொலிப் பேட்டி)

செய்தியாளர்: தங்கள் உடல்நலத்தையும் பிற நலத்தையும் கேட்டிறிவது முறை. தமிழ் மக்களும் இதுபற்றி அறிய ஆவலாக இருப்பார்கள். தங்கள் உடல் நலம் எவ்வாறிருக்கிறது?

அண்ணா: சென்னையிலிருந்து புறப்படும்போதே நல்ல உடல்நலத்துடனே புறப்பட்டேன். இப்போது நலமாகவே உள்ளேன்.

செய்தியாளர்: யேல் பல்கலைக்கழகத்தில் தங்களுக்கு எற்பாடு செய்யப்பட்ட நிகழ்ச்சி நிரல் பற்றி என்ன கருதுகிறீர்கள்?

அண்ணா: நிகழ்ச்சிகள் மன எழுச்சி ஊட்டும் வகையிலும் உள்ளத்திற்கு உவகை அளிக்ககும் வகையிலும் அமைக்கப்பட்டுள்ளன. திட்டமிட்டபடி அவை ஒழுங்காக நடந்து வருகின்றன.

செய்தியாளர்: சப் திட்டத்தில் பெரிய பிரமுகர்கள் வரிசையில் தாங்கள் அழைக்கப்பட்டது குறித்துத் தமிழ்நாடு பெருமையடைகிறது.

இங்கு வந்தது பற்றி என்ன கருதுகிறீர்கள்?

அண்ணா: நான் இந்தியாவிலிருந்து வந்தேன் என்பதால், இங்குள்ள மாணவர்கள் நம் நாட்டின் நிலை பற்றி அறிய ஆர்வங்காட்டினார்கள். இந்தியாவின் தொழில் முன்னேற்றம், சாதிக்கட்டுப்பாடு போன்ற பல வகைப்பட்ட பொருள்கள் குறித்து அறிய ஆவல் காட்டினர். தமிழ்நாட்டைப் பற்றி நிரம்பத் தகவல்களைக் கேட்டறிந்தனர். இவற்றை அறிய அவர்கள் காட்டிய ஆர்வங்கண்டு மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

செய்தியாளர்: இங்கு இந்தியாவைப் பற்றி அறிய ஆர்வம் அதிகம் இருந்ததா? தமிழகத்தைப் பற்றி அறிய ஆர்வம் அதிகமாயிருந்ததா?

அண்ணா: இந்தியாவின் பொது முன்னேற்றத்தைப் பற்றி அறியவும், ஐந்தாண்டுத் திட்டங்களைப் பற்றி அறியவும் ஆர்வங் காட்டினர்.
தமிழக வரலாறு, தமிழர் கலாச்சாரம், தமிழ்மொழி ஆகியவை குறித்தும் அறிய ஆவலுடன் இருந்தனர். தமிழ் நாட்டில் காங்கிரஸ் அல்லாத கட்சி அரசு அமைத்திருப்பதைப் பற்றி விளக்கமாக அறிய விரும்பினர்.

செய்தியாளர்: அண்மையில் தொலைக்காட்சி வானொலிப் பேட்டிகளில் எத்தகைய கேள்விகள் கேட்கப்படுகின்றன?

அண்ணா: எல்லோரும் ஐந்தாண்டுத் திட்டங்கள் பற்றியும் உணவுநிலை குறித்தும் மிக அக்கறையுடன் கேட்டனர். சென்ற ஆண்டு இந்தியாவின் உணவுநிலை சீர்கேடு அடைந்தது. அதை அவர்கள் அறிந்திருந்ததால், இந்த ஆண்டு எப்படி இருக்கிறது என்று அறிய ஆவல் கொண்டுள்ளனர்.
வேளாண்மையில் புதிய திருப்பங்கள் பற்றியும் அவை எந்த அளவு வெற்றிபெற்றன என்பது பற்றியும் அறிய விரும்பினார்கள்.
வெளிநாட்டுக் கொள்கை பற்றி விரிவாகக் கேட்கவில்லை என்றாலும் வியட்நாம் குறித்துக் கேட்டார்கள்.
நான் திமுகவானாலும் வெளிநாட்டுக கொள்கையில் இந்திய அரசின் கொள்கைகளுக்கு பொதுவான ஒப்புதலைத் திமுக தந்திருக்கிறது என்று எடுத்துக் கூறினேன்.

செய்தியாளர்: திமுக அரசு அமைத்தது எவ்வாறு என்று கூறினீர்கள்?

அண்ணா: திமுக அரசு அமைந்திருப்பது வியக்கத்தக்க நிகழ்ச்சி ஒன்றுமில்லை. 1957-ல் 15 இடங்களில் வெற்றிபெற்றோம். எங்கள் பணியைப் பாராட்டிய மக்கள் இரண்டாவது தேர்தலில் 50 இடங்களை அளித்தார்கள். 1967-ல் 130-க்கு மேற்பட்ட இடங்களை

வழங்கினார்கள். ஆகையால், இந்த வளர்ச்சி படிப்படியாக ஆய்ந்து பார்த்து மக்கள் அளித்த ஆதரவால் ஏற்பட்டது. சட்டென்று குருட்டாம்போக்காக ஏற்பட்டது அல்ல எனக்கூறுகிறேன்.

செய்தியாளர்: இங்குள்ள மாணவர் போக்கு எவ்வாறு உள்ளது?

அண்ணா: உலகில் பல நாடுகளிலும் மாணவர்கள் எதிர்காலத்தில் தங்களைப் பாதிக்கக் கூடியவற்றில் அக்கறை காட்டுவது வரவேற்கத் தக்கதாகும்.
கிளர்ச்சி செய்யும்பொழுது அவர்களிடம் அக்கறை காட்டுவது போலவே மற்ற நேரங்களில் அவர்களை விட்டுவிடக்வடாது.
அவர்கள் மனப்போக்கை அறிந்து கொள்ள வேண்டும்.
கறுப்பின மாணவர்களுக்கு அதிக இடங்களை ஒதுக்கவேண்டும் என மாணவர்கள் இங்குக் கிளர்ச்சி நடத்தியதாகச் செய்தித்தாளில் இப்போதுதான் ஒரு செய்தி படித்தேன். இதுபோன்ற இன்றியமையாத கிளர்ச்சியில் மாணவர்கள் ஈடுபடுவது வரவேற்கத்தக்கது. இத்தகைய பிரச்சினைகள் காலத்தால் ஏற்படுபவை. அவற்றை ஒதுக்கிவிட முடியாது.
இங்கு அமெரிக்க மாணவர்கள் இந்திய மாணவர்களுடன் தோழமை உணர்ச்சியுடன் பழகுகிறார்கள். இது கண்டு பூரிப்படைந்தேன்.

செய்தியாளர்: நயாகரா நீர்வீழ்ச்சியைப் பார்த்தவின் ஓர் எழுத்தாளர், ஒரு கலைஞர் என்னும் முறையில் தங்கள்

எண்ணங்களைக் கூறுங்கள்.

அண்ணா: நயாகரா நீர்வீழ்ச்சி கனடாநாட்டுப் பகுதியின் எழில்தோட்டமாக அமைந்துள்ளது. அமெரிக்கப் பகுதியில் தொழில் வளம் பெருகியுள்ளது. கனடா நாட்டுப் பகுதியிலிருந்து பார்ப்பது எழில்மிகுந்தது. தொடர்ந்து இது பற்றிப் பேசும்பொழுதும் எழுதும்பொழுதும் குறிப்பிடலாம் என இருக்கிறேன்.
சுருக்கமாகச் சொல்லப்போனால் நயாகரா நீர்வீழ்ச்சி மிக அழகுடனும் எழுச்சி தருவதாகவும் மிகப் பெரியதாகவும் இருந்தது என்பேன்.

செய்தியாளர்: தாங்கள் ஒரு பால் பண்ணையைப் பார்வையிட்டீர்களே? அம்முறைகளைத் தமிழ்நாட்டில் புகுத்த இயலுமா?

அண்ணா: அமெரிக்காவில் கண்ட வியத்தகு அமைப்புகளைத் தமிழகத்தில் புகுத்த முடியாது எனக் கருதுகிறேன். நூற்றுக்கணக்கான ஏக்கர் நிலங்களை மேய்ச்சலுக்காக ஒதுக்கும் அளவு தமிழ்நாட்டில் நிலம் இல்லை என்றாலும் அறிவியல் துறையில் பல பாடங்களை நாம் பெற இயலும்.

பாப்லோநகர் அருகிலுள்ள ஒரு வேளாண் குடும்பத்துடன் நான் தங்கி இருந்தேன். அந்த இடம் அமைதி சூழ்ந்திருந்தது. சற்றிலும் சிறிய குன்றுகளும் பசுமையான வயல்களும் வயல்களுக்குத்

தேவையான இயந்திரங்களும் இயந்திரங்களைச் செலுத்த உழவர்களும் அவர்களிடமுள்ள பொது அறிவும் பெருமைப் படத் தக்கதாய் இருந்தன.

நம் நாட்டிலும் படித்தவர்கள் வேளாண்மை, பால்பண்ணை போன்றவற்றை நடத்துவதில் ஈடுபடவேண்டும். புதிய முறைகளை ஆய்ந்து பார்க்கவேண்டும்.

(27.04.1968 அன்று யேல் பல்கலைக்கழகத்தில் அண்ணா அளித்த வானொலிப் பேட்டி)

# வானொலிப் பேட்டியில் அண்ணா பாராட்டு

(28.04.1968 அன்று வாஷிங்டன் வானொலிப் பேட்டியில் அண்ணா வழங்கிய பாராட்டுரை)
அமெரிக்க நாட்டு மக்கள் நம் நாட்டு மக்களிடத்தில தோழமை பூண்டிருக்கிறார்கள்.

வாஷிங்டனிலுள்ள கலைக்கண்காட்சியைச் சிறிது நேரந்தான் பார்வையிட முடிந்தது. உலகிலிருந்து அருமையான பல்பொருள்களை அங்கு சேகரித்து வைத்திருக்கிறார்கள். இதைக் காண ஆயிரக்கணக்கில் ஒவ்வொரு பகுதியிலிருந்தும் மக்கள் வருகிறார்கள்.

வாஷிங்கடனீல் ஆப்ரகாம் லிங்கன் நினைவுச் சின்னத்தைப் பார்வையிட்டபோது, ஆபிரகாம் லிங்கன் பற்றிப் படித்து அறிந்திருந்த பல்வேறு எண்ணங்கள் இதயத்தில் கனிந்தெழுந்தன.

ஜனநாயகத்திற்காகப் பிற்பட்ட மக்களுக்காகவும் பாடுபட்ட மாபெரும் தலைவரை ஒரு வெறியன் கொன்ற நிகழ்ச்சி, நம்

நாட்டிலும் இப்படிப்பட்ட துயர நிகழ்ச்சி நடந்ததை நினைவூட்டியது. லிங்கன் இறந்துபட்டாலும் அவர் மூலமாக அமெரிக்க மக்களிடம் ஜனநாயகம் பசுமையாக இருக்கிறது.

போர்ட் தியேட்டர் அரங்கில் ஆபிரகாம் லிங்கன் கொல்லப்பட்டது நமக்குத் தெரியும். ஆனால், அங்குக் கண்டது இதுவரை காணாத காட்சி. நாடகக் கொட்டகையைத் திருத்தி லிங்கன் நினைவாலயத்தை அடிவாரத்தில் அழகாக அமைத்திருக்கிறார்கள்.

ஆபிரகாம் லிங்கன் எந்த இடத்தில் நாடகம் பார்த்தார், எங்கு உட்கார்ந்திருந்தார், கொலையாளி எப்படி வந்தான், எப்படித் தப்பித்தான், எந்த வழிகாகச் சென்றான் என்பதை நாடக அரங்கப் பணியாளர்கள் விளக்கியபோது கண்களில் கண்ணீர் மல்கியது. கேட்கின்ற நம்முடைய நெஞ்சம் நெகிழ்ந்தது. எப்படிப்பட்ட தலைவர் எப்படிப்பட்ட முடிவை அடைந்தார் என்பதை எண்ணியபோது வருத்தம் மேலிட்டது.

நான் சென்றபோது சேக்குவியரின் நாடகமொன்று காட்டப்பட்டது. அமெரிக்க மக்கள் இதனைக் காண வந்தார்கள். வெறும் நாடகம் பார்க்க வரவில்லை. ஒப்புயர்வற்ற தலைவரின் நினைவுச் சின்னத்தைக் காணுகிறோம் என்னும் புனித உணர்ச்சியோடு வந்தார்கள்.

வாஷிங்கடனில் தங்கி இருந்தபொழுது அமெரிக்க வாழ்க்கையின் பல்வேறு துறையினரைக் கண்டு கலந்துரையாடினேன். இந்தியத் தூதரகத்தைச் சேர்ந்ததோரைக் கண்டு அளவளாவினேன். நல்ல கருத்துகளைப் பரிமாறிக்கொண்டேன்.

நியுயார்க், யேல், வாஷிங்டன் ஆகிய இடங்களுக்குச் சென்று வந்ததில் மன எழுச்சி கொண்டுள்ளேன்.

தமிழ் நாட்டார் உட்பட இந்தியர்கள் பலரைச் சந்தித்தேன். அவர்கள் நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் கொண்டிருக்கிறார்கள். அமெரிக்காவில் தாங்கள் பெற்றுவரும் திறமைகளை நம் நாட்டுக்குப் பயன்படுத்த மெத்த ஆர்வம் கொண்டிருக்கிறார்கள் என்பதையறிந்து மகிழ்ச்சியடைந்தேன்.

(28.04.1968 அன்று வாஷிங்டன் வானொலிப் பேட்டியில் அண்ணா வழங்கிய பாராட்டுரை)

# அண்ணா உரையாடல்

(08.05.1968 அன்று ஜப்பான் வெளிநாட்டு அமைச்சர் திரு. மியோடு அண்ணா கலந்துரையாடியது)
மிகி: உங்கள் பிரச்சினைகளின் நிலைமை இப்போது எவ்வாறு உள்ளது?

அண்ணா: இந்தப் பிரச்சினைகள் எல்லாம் நீண்ட நெடுங்காலப் பிரச்சினைகள். அவற்றுடனே நாங்கள் வாழ்ந்து வருகிறோம். அவற்றையும் நாங்கள் வெற்றிகொள்வோம். உங்கள் ஜப்பான் நாடு எவ்வளவோ எரிமலைகளின் சீற்றங்களுக்கிடையிலும் எவ்வளவு முன்னேற்றம் அடைந்திருக்கிறது!
நீங்கள் பெற்றிருக்கும் எரிமலைகளைப் போலவே நாங்களும் மனித எரிமலைகளைப் பெற்றிருக்கிறோம். நீங்கள் எப்படி எரிமலைகளோடு பழக்கப்பட்டுச் சமாளிக்கும் ஆற்றல் பெற்றிருக்கிறீர்களோ அப்படியே நாங்களும் சமாளிப்போம்.

மிகி: இந்தியாவின் மொழிச் சிக்கல் பற்றி என்ன கூற இருக்கிறீர்கள்?

அண்ணா: இந்தியா ஒரு மாபெரும் நாடு. அது ஜப்பானைப் போலல்லாமல் பல்வேறு மொழிகளைப் பேசும் மக்கள் அங்கு இருக்கின்றனர். இந்த வேற்றுமைகளுக்கிடையிலும் ஒற்றுமை கண்டு வருகிறோம்.
பல்வேறு மொழிகளைப் பேசும் நாங்கள் ஒற்றுமையாக வாழக் கற்றிருக்கிறோம். சில சிக்கல்கள் ஏற்படத்தான் செய்கின்றன. அவற்றைச் சமாளித்து வருகிறோம்.

மிகி: இந்தியாவின் எதிர்காலம் எவ்வாறு இருக்கும்?

அண்ணா: இந்தியாவின் எதிர்காலத்தைப் பற்றி எனக்கு முழு நம்பிக்கை இருக்கிறது. இந்தியாவில் பெரிய பிரச்சினைகள் இருந்தபோதிலும் அவற்றைச் சமாளித்து முன்னேறிக் கொண்டிருக்கிறோம்.

மிகி: குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டம் எவ்வாறு செயற்படுகிறது?

அண்ணா: இந்தியாவில் குடும்பக் கட்டுப்பாட்டுத்திட்டம் அழுத்தமாக வேரூன்றிவிட்டது. இத்துறையில் தமிழ்நாடும் மராட்டிய மாநிலமும் முன்னேறி வருகின்றன.

மிகி: ஜப்பானியக் குடும்பக் கட்டுப்பாட்டுத்திட்டம் அளவுக்கு மீறிய வெற்றி பெற்றுவிட்டதால், கவலைப்படவேண்டியுள்ளது.

எனவே குடும்பக் கட்டுப்பாட்டைத் தளர்த்த வேண்டிய காலம் வந்துவிட்டது. குடும்பக் கட்டுப்பாடு காரணமாக ஜபபானில் தொழிலாளர் பற்றாக்குறை ஏற்பட்டிருக்கிறது.

அண்ணா: சேலம் உருக்காலைத் திட்டத்தைத் தவிர, வேறு திட்டவட்டமான எந்தப் பிரச்சினை குறித்தும் நான் டோக்கியோவில் பேசவில்லை.

(08.05.1968 அன்று ஜப்பான் வெளிநாட்டு அமைச்சர் திரு. மியோடு அண்ணா கலந்துரையாடியது)

# ஹாங்காங்கில் அறிஞர் அண்ணா பேட்டி

(10.05.1968 அன்று ஹாங்காங்கில் செய்தியாளருக்கு அளித்த பேட்டி)
செய்தியாளர்: பயணம் பயனுள்ளதாக அமைந்தது என நம்புகிறோம்.

அண்ணா: நான் மகிழ்ச்சியில் அமிழ்ந்திருப்பதை நீங்கள் பார்க்கவில்லையா? ஜப்பானில் வணிகத் துறையினரும் அரசு அதிகாரிகளும் ஒருவருக்கொருவர் ஒருங்கிணைந்து ஒத்துழைக்கின்றனர்.
ஜப்பானில் சேலம் இரும்பாலை அமைப்பு பற்றியும், மீன் வளத்திட்டம் பற்றியும், வேளாண்மைத் திட்டங்கள் பற்றியும் பேசியுள்ளேன். இவை பற்றி மைய அரசுக்குத் தெரிவித்து உரிய முடிவு எடுக்கச் செய்வேன்.

செய்தியாளர்: எவ்வகை ஒப்பந்தத்திலும் கையெழுத்திட்டீர்களா?

அண்ணா: எவ்வகை ஒப்பந்தத்திலும் கையெழுத்திடவில்லை. எங்கள் அரசு ஒரு கூட்டாட்சி அரசாகும். மைய அரசுக்கு எங்கள் விருப்பத்தைத்தான் தெரிவிக்கலாம்.

செய்தியாளர்: நீங்கள் இப்போது தனித் திராவிடநாடு கேட்கவில்லையா?

அண்ணா: (அண்ணா சிரித்துக்கொண்டே) நான் அந்த முயற்சியைக் கைவிட்டு நெடுநாளாயிற்று. (அண்ணா இறுதியாகக் கூறியதாவது) தமிழகத்தை இந்தியாவிலேயே தலை சிறந்த மாநிலமாக்க முடியுமென நம்புகிறேன். இந்திய அரசுக்குக் குந்தகம் எதுவும் விளையாத வகையில் இக்குறிக்கோளை அடைய முயற்சி செய்வோம்.

(10.05.1968 அன்று ஹாங்காங்கில் செய்தியாளருக்கு அளித்த பேட்டி)

# மொழி உள்ளிட்ட பல பிரச்சினைகள்

(02.06.1968 அன்ற சென்னையில் அண்ணா செய்தியாளருக்கு அளித்த பேட்டி)

செய்தியாளர்: காஷ்மீரில் நடைபெறும் ஒருமைப்பாட்டு மாநாட்டுக்குச் செல்வீர்களா? சதந்திராக் கட்சியின் ரங்கா போன்றவர்கள் அங்குச் செல்ல மறுக்கிறார்களே?

அண்ணா: நான் அங்குச் செல்வதாக இல்லை. ரங்கா காட்டும் காரணம் போன்றதல்ல நான் செல்லாததற்குக் காரணம், இங்கு எனக்கு வேலைகள் அதிகம். எனக்குப்பதில் வேறு யாராவது செல்லலாம்?

செய்தியாளர்: கருணாநிதியின் சிலை பற்றி...

அண்ணா: சிலை வேண்டாம் என்று கூறப்பட்டுவிட்டது.

செய்தியாளர்: அரசிதழ் பதிவுபெறாத ஊழியர்களுக்குத் திருமணக் கடன் திட்டம் விரைவில் வருமா?

அண்ணா: கைவிடப்பட்டது என்று கூடச் சிலர் கூறுகின்றனர். ஆனால், அத்திட்டம் கைவிடப்படவில்லை. அது பற்றிய இறுதி முடிவு விரைவில் எடுக்கப்படும்.

செய்தியாளர்: சென்னையில் வழங்கப்படும் நெல்லூர் அரிசி விலை உயர்ந்ததாக இருக்கிறதே?

அண்ணா: அதை நாம் ஆந்திராவிடமிருந்து வாங்குகிறோம். இலாபமுமில்லை இழப்புமில்லை என்னும் முறையில் அதை நடத்துகிறோம். ஆகவே, விலை உறுதி செய்தல் அதைப் பொறுத்துத்தான் இருக்கிறது. தற்போது நமக்குத் தரப்படும் நெல்லூர் அரிசி பழைய தரத்தில் இல்லை என்னும் குறையும் இருக்கிறது.

செய்தியாளர்: நம் மாநிலத்தில் தொழில்கள் அமைக்க மைசூர் அரசு செய்வதைப் போலக் பல இடங்களுக்குச் சென்று தொழிலதிபர்களை அழைக்கும் முறை மேற்கொள்ளப்படுமா?

அண்ணா: அதில் அவர்கள் எவ்வளவு தூரம் இந்தப் பொருளாதாரச் சூழ்நிலையில் வெற்றியடைவார்கள் என்று பார்ப்போம்.

செய்தியாளர்: சேலம் உருக்காலைப் பற்றி...

அண்ணா: நான் மிகுந்த நம்பிக்கையுடன் இருக்கிறேன். நான்காவது திட்டத்தில் அது சேர்க்கப்படும் என நம்புகிறேன்.

செய்தியாளர்: உங்கள் நம்பிக்கை மைய அரசு தந்த வாக்குறுதியின் பேரிலா.

அண்ணா: அப்படித் தந்திருந்தால் நான் வெளிப்படையாகக் கூறிவிடுவேன். ஆனால், அப்படி இல்லை. இருப்பினும், மிகுந்த நம்பிக்கையுடன இருக்கிறேன்.

செய்தியாளர்: தாங்களும் தமிழ்நாடு காங்கிரஸ் தலைவரும் கலந்து பேசி இந்தக் கறுப்புக்கொடி ஆர்பாட்டத்திற்கு முடிவுகட்டக் கூடாதா?

அண்ணா: இதைக் காங்கிரஸ் கட்சி செய்தால் அவருடன் பேசலாம். உள்ளூர்க்காரர்கள் செய்ததாகக் கூறுகிறார்கள். இனி உள்ளூர்க்காரர்களுடன் பேச வேண்டியதுதான். கறுப்புக்கொடி காட்டுவதை எதிர்ப்பவன் அல்லன் நான் கறுப்புக்கொடி காட்டுதல் என்பது ஜனநாயக முறைகளுள் ஒன்று. ஆனால் இன்ன காரணத்திற்காக இன்ன இடத்தில் காட்டுவது என்னும் முறைகள் உண்டு. அது கடைப்பிடிக்கப்படவில்லை.

செய்தியாளர்: தென்காசி இடைத்தேர்தலில் திமுக வேட்பாளர் யார் என்ற எப்போது அறிவிப்பீர்கள்?

அண்ணா: இம்மாதம் ஆறாம் நாள் திருச்சியில் திமுக பாராளுமன்றக்குழு கூடும். அப்போது அது முடிவு செய்யப்படும்.

செய்தியாளர்: நேசமணி மறைந்ததால் இன்னொரு இடம் காலியாகிறது. அதில் காமராசர் நிற்கப் போகிறாராமே!

அண்ணா: காமராசர் நின்று தில்லிபோய் அமைச்சர் ஆக முடியாது. சுப்பிரமணியம் நின்றால் அங்குப் போய் அமைச்சராகலாம் என்னும் கருத்து காங்கிரஸ் வட்டாரத்தில் இருக்கிறது என்று நண்பர்கள் கூறினார்கள். பொதுவாக, நேசமணி இப்போதுதான் மறைந்திருக்கிறார். இது பற்றி விரிவாகப் பேசுவது சரியல்ல.

செய்தியாளர்: பம்பாயில் சிவசேனையின் அடாவடிச் செயல்கள் அதிகமாகி வருகின்றனவே?

அண்ணா: நாட்டில் வளரும் சீர்கேடுகளில் அது ஒன்று. அந்தச் சேனை பற்றி இப்போதுதான் சவானும் மற்றவர்களும் வாய்திறந்து பேசுகிறார்கள். நான் தில்லியில், “இந்தச் சேனைகளின் இலட்சியங்கள் முதலியவற்றை ஆய்ந்து ஒருமைப் பாட்டுக்கும் சட்ட ஒழுங்கிற்கும் மாறாக இருந்தால், அவற்றை நீக்கும்படியாகக் கேட்டுக்கொள்ளலாம். வெறுந்தொண்டர் படையாகவே இருக்கும் என்றால் அனுமதிக்கலாம்” என்று கூறினேன்.

செய்தியாளர்: மைய அரசு உங்கள் கருத்துக்கு என்ன பதிலுரைத்தது?

அண்ணா: என் கருத்தை அவர்கள் வரவேற்றது போன்று தெரிந்தது. ஆனால், இப்போது ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு சேனை துவக்கப்படுகிறது.

செய்தியாளர்: மொழிக் கொள்கை பற்றித் தில்லியில் என்ன கூறினீர்கள்?

அண்ணா: நான் என் இருமொழித் தீர்மானத்தில் உறுதியாய் இருப்பதும் அதிலிருந்து பின்னடையப் போவதில்லை என்பதும் அவர்களுக்குத் தெரியும்.

நான் தில்லியில் தலைமை அமைச்சரையும் ஏனைய அமைச்சர்களையும் சந்தித்தேன். அவர்களுக்கு நான் நிறைவேற்றிய மொழிக்கொள்கைத் தீர்மானம் பற்றித் தெரியும். ஏன் அதைச் செய்தீர்கள் என்றோ அதை மறு ஆய்வு செய்யவேண்டுமென்றோ அவர்கள் என்னை கேட்கவில்லை. கல்வி என்பது மாநில அரசின் பொருள் என்பதை அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள்.

செய்தியாளர்: மொழிப் பிரச்சினையில் தீர்வு காண என்ன செய்ய வேண்டும்?

அண்ணா: காங்கிரஸ் கட்சியின் வட இந்தியத் தலைவர்களும் தென்னிந்தியத் தலைவர்களும் கலந்து பேசி ஒரு முடிவை எடுத்துக் கொள்ளவேண்டும். சுப்பிரமணியம் கூட வினோபாவைச் சந்தித்தார் என்ற செய்தி வந்தது. என்ன பேசினார்கள் என்பது தெரியவில்லை.

செய்தியாளர்: தென்மாநிலங்கள் ஒன்று சேர்ந்து மொழிப் பிரச்சினைக்கு முடிவு காண முடியுமா?

அண்ணா: தென்னிந்திய மாநிலங்கள் ஒன்று சேர்ந்து கூட்டணியாகச் செய்லபடவேண்டுமானால், அது மொழித் தீர்மானத்தை நீக்கும்படி கேட்பதில் மட்டுமே இருக்கலாம். ஏனெனில், அந்த ஒரு பொருளில் மட்டுந்தான், தென்னாட்டு மாநிலங்கள் ஒன்றாக இருக்கின்றன. ஏனைய பொருள்களில் கருத்து வேறுபாடு இருக்கிறது. அவ்வாறு மொழித் தீர்மானம் நீக்கப்பட்டுவிட்டால், மொழிப்பிரச்சினை பற்றி விரிவாகப் பேச நல்ல சூழ்நிலை ஏற்படும்.

செய்தியாளர்: பேராவூரணியில் நடைபெற்ற நிகழ்ச்சி பற்றி மேலுந் தகவல் கிடைத்ததா?

அண்ணா: நேற்று (01.06.1968) கருணாநிதி தங்கியிருந்த பேராவூரணிப் பயணிகள் விடுதீ யில் கறுப்புக் கொடி காட்டியவர்கள் உள்ளே நுழைந்து கதவை உதைத்துத் திறந்திருக்கிறார்கள் என்ற

செய்தி வந்தது. முழு விவரம் இன்னும் வரவில்லை. நான் கருணாநிதியியைத் தொடர்புகொள்ள இருக்கிறேன்.

செய்தியாளர்: தாங்கள் சோவியத்து ஒன்றியம், ஐரோப்பா ஆகிய நாடுகளுக்குச் செல்லுவதாக இருக்கிறீர்களா?

அண்ணா: ஐரோப்பா இப்போது மிக வெப்பமாக இருக்கிறது(சிரிப்பு)

செய்தியாளர்: இலங்கைக்குச் செல்லப் போகிறீர்களா?

அண்ணா: இல்லை. கல்வியமைச்சர் செல்வதாக இருக்கிறார்.

செய்தியாளர்: இலங்கையிலிருந்து வருவோருக்கு என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது?

அண்ணா: சில ஏற்பாடுகளைச் செய்து வருகிறோம். கூடலூரில் 5 ஆயிரம் ஏக்கரும் திருச்சிப் பகுதியில் சில இடங்களும் குடியேற்றத்திற்காகவும் மலைத் தோட்டத்தொழிலுக்காகவும் பார்த்திருக்கிறோம். அந்தமானில் குடியேற்றுவது பற்றி மைய அரசு ஆராய்ந்து வருகிறது.

இந்தப் பிரச்சினை நமக்குப் பெரிய பிரச்சினையாக இருக்கிறது. மைய அரசு சில திட்டங்களில் ஒத்துழைத்தாலும் பர்மாவிலிருந்து

வருவோரின் சொத்துகள் பற்றிய விவரத்தினை அறிவதில் தட்டிக் கழிக்கும் போக்கில் இருக்கிறது.

செய்தியாளர்: பர்மா அரசு ஒத்துவராத அரசாங்கமாக இருக்கிறதா?

அண்ணா: பர்மா ஒத்துவராத அரசாங்கம். சீனா பிடிவாதமானது என்று கூறிக்கொண்டே போனால் நாம் என்ன அரசாங்கமாக இருப்பது?

செய்தியாளர்: இந்த ஆண்டு கல்லூரிச் சேர்க்கை எப்படி இருக்கும்?

அண்ணா: இந்த முறை கலைக் கல்லூர போன்றவற்றிற்கு அதிகாரப்பற்றற்ற அதர்வுக்குழு இராது. அதிகாரிகளே தேர்ந்தெடுப்பர். மருத்துவக் கல்லூரியில் சென்ற ஆண்டு இருந்தது போன்றே இருக்கும். ஆனால், மாவட்ட வாரியாக இடம் ஒதுக்கப்பட மாட்டாது.

செய்தியாளர்: மருத்துவக் கல்லூரிகளுக்கு ஒரு குழுவா, ஒன்றுக்கு மேற்பட்ட குழுவா?

அண்ணா: ஒன்றுக்கு மேற்பட்டதாகத்தான் இருக்கும். ஆனால் மாவட்ட வாரியாகக் குழு இராது. விரைவில் முடிவுகள் எடுக்க

குழுக்கள் விரிவாக அமைக்கப்படலாம். ஏனெனில், இங்கே இடம் கிடைக்கவில்லை என்றால் பிற கல்லூரிகளில் சேரலாம்.

இந்த ஆண்டும் சென்ற ஆண்டைப் போலவே நெருக்கடி இருக்குமானால், கல்லூரிகளை விரிவுப்படுத்தாமல் மாற்று வேளைமுறை (Shift) வைக்கலாம். சென்ற ஆண்டே இதுபற்றிக் கருதினோம். சூழ்நிலை இந்த ஆண்டு மாற்று வேளைமுறை ஏற்படுத்த வற்புறுத்தும் என்று நம்புகிறோம்.

(02.06.1968 அன்ற சென்னையில் அண்ணா செய்தியாளருக்கு அளித்த பேட்டி)

# நிர்வாகமும் கட்சித் தலையீடும்

(13.07.1968 அன்று பெங்களூரில் செய்தியாளர்களுக்கு அண்ணா அளித்த பேட்டி)

வினா: அரசு நிர்வாகத்தின் அன்றாட அலுவல்களில் திமுக தலையிடுகிறது என்னும் சுப்பிரமணியம் குற்றச்சாட்டுக்குத் தங்கள் பதில் என்ன?

விடை: அரசு நிர்வாகத்தின் அன்றாட அலுவல்களில் திமுக தலையிடுகிறது என்று சி.சுப்பிரமணியம் கூறுகின்றார். அது உண்மைக்குப் புறம்பானது. எந்தக் கட்சிக்கும் குறிப்பாகத் திமுக-வி ற்கு நிர்வாகத்தினர் எவ்வகைச் சலுகையும் காட்டக் கூடாது என்று அரசு கண்டிப்பான கட்டளை இட்டிருக்கிறது.

வினா: திமுக சாதனைகள் குறித்து குறை கூறுவது பற்றித் தங்கள் கருத்தென்ன?

விடை: தமிழக அரசு செய்துள்ள சாதனைகள் அதன் 15 மாத ஆட்சிக் காலத்துக்குள் வரையறைப்படுத்திக் குறைப்பட்டுக் கொள்வது பொருத்தமற்றது. அரசாங்கத்தின் செயல்முறைகளை

ஆய்வு செயவதற்கு 15 மாத காலம் (1967 மார்ச் முதல் 1968 மே வரை) மிகவும் குறுகிய காலமாகும். எனவே, சி.சுப்பிரமணியம் போன்றவர்கள் திமுக அமைச்சரவை மீது கூறுகின்ற குற்றச்சாட்டுகள் அவ்வளவு முக்கியம் வாய்ந்தவை அல்ல.

வினா: பின் எவ்வாறு குற்றச்சாட்டுகளைக் கூறுவது?

விடை: திமுக அமைச்சரவை மீது குறைப்பட்டுக் கொள்ளும் சி. சுப்பிரமணியம் அண்மையில் குறை ஏதாவது இருக்குமானால், இன்ன வகையில் குறை உள்ளது என்று அதனைக் குறிப்பிட்டுக் கூற வேண்டும். அப்போதுதான் குறையை நீக்குவதற்கான நடவடிக்கை எடுக்க முடியும். உண்மைக்குப் புறம்பான குற்றச்சாட்டுகளால் எவ்விதப்பயனும் ஏற்படாது.
திமுக நிர்வாகத்தில் ஏதேனும் குறைபாடு இருக்குமானால், தமிழகத்தில் ஒரு பொறுப்பான எதிர்க்கட்சி என்னும் வகையில் காங்கிரஸ் கட்சி அந்தக் குறைபாட்டினைக் குறிப்பிட்டு, அரசின் கவனத்துக்குக் கொண்டு வருவதுதான் கடமை. அப்போதுதான் உண்மையாகவே ஏதேனும் குறைபாடு இருக்குமானால், அதனை விரைந்து நீக்க முடியும்.

வினா: திமுகவிற்குக் கொள்கையோ திட்டமோ இல்லை என சி.சுப்பிரமணியம் கூறுகின்றார். அதுபற்றித் தங்கள் கருத்தென்ன?

விடை: அப்படி என்றால் காங்கிரசுக்கும் கொள்கையோ திட்டமோ இல்லை என்றுதான் ஆகிறது. காங்கிரசின் கொள்கை ஜனநாயக சோஷலிசமா அல்லது வேறு எதுவுமா என்பது பற்றித் திட்டவட்டமான வரைவு வேண்டும் என்று காங்கிரசிற்குள்ளேயே ஒரு பகுதியினர் இன்னுஞ் சொல்லிக் கொண்டிருக்கின்றனர். இதன் மூலம் காங்கிரசுக்குக் கொள்கையும் திட்டமும் இல்லை என்பது மெய்ப்பித்துக் காட்டப்படுகிறது.

(13.07.1968 அன்று பெங்களூரில் செய்தியாளர்களுக்கு அண்ணா அளித்த பேட்டி)

# நான்காம் ஐந்தாண்டுத் திட்டப் பணிகள்

(1968 செப்டம்பரில் சென்னையில் திட்டக்குழுத் துணைத்தலைவர் விரிவாகக் கலந்துரையாடியபின் செய்தியாளர்களிடம் அண்ணா கூறியவை)

தமிழ்நாட்டைப் பொறுத்தவரை வரிபோடுவதன் மூலம் மாநில அரசு நிதிவசதிகளைப் பெருக்கிக் கொள்வதில் ஏற்கனவே உச்சகட்டத்தை எட்டியாகிவிட்டது. ஆகவே, புதிய வரிகள் மூலம் மாநில அரசின் நிதி ஆதாரங்களைத் தேடுவதென்பது இயலாத செயல்.

மைய அரசு எந்த அடிப்படையில் மாநிலங்களுக்கு நிதி ஒதுக்க உத்தேசித்துள்ளது. மக்கள் தொகையின் அடிப்படையிலா அல்லது குறிப்பிட்ட மாநிலத்தின் பின்தங்கிய நிலையை வைத்துத் தலைகட்டுக்கு இத்தனை வரி போடப்பட்டுள்ளது என்னும் அளவை வைத்தா, அந்தந்த மாநிலத்துப் பெருநகரங்களின் தேவைகளை வைத்தா என்பதைத் தெளிவுபடுத்தவேண்டும்.

வறட்சிப் பகுதிகள் விஷயத்திலும் பஞ்ச நிவாரணப் பணிகளிலும் தனிக்கவனம் செலுத்த வற்புறுத்தப்பட்டது.

தமிழ்நாட்டின் நான்காம் திட்டத்தில் துவக்க இருக்கிற தொழில்கள் பற்றி விரைவில் முடிவாகும்.
வேளாண்மைக்கு நிலத்தடி நீரைப் பயன்படுத்துதல் கால்வாய்களை விரிவுபடுத்துதல், தஞ்சை மாவட்ட வடிகால் அமைப்பைச் சீரமைத்தல், குளத்துபபாசனம் உள்ள பகுதிகளில் குளங்களைத் தூரெடுத்தல், சென்னை நகரக் குடிநீர்ப் பிரச்சனையைத் தீர்த்தல், விரிவான சென்னை மாநகர அமைப்புத்திட்டத்தை மேற்கொள்ளுதல், கைத்தறி மற்றும் மூடிய மில்களின் பிரச்சினைக்குத் தீர்வு காணுதல், இலங்கையிலிருந்து குடிபெயர்ந்து வருவோரது மறுவாழ்வுக்கான திட்டங்களை அமலாக்குதல், படித்து வேலையில்லாது இருப்போர் பிரச்சினைக்குத் தீர்வு காணுதல் ஆகிய பணிகளே தமிழக அரசு நான்காம் ஐந்தாண்டுத் திட்டத்தில் நிறைவேற்ற விரும்புகிறது.

(1988 செப்டம்பரில் சென்னையில் திட்டக்குழுத் துணைத்தலைவர் விரிவாகக் கலந்துரையாடியபின் செய்தியாளர்களிடம் அண்ணா கூறியவை)

## FREETAMILEBOOKS.COM

**மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்:**

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

**ஆங்கிலத்திலுள்ள மின்புத்தகங்கள்:**

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

**தமிழிலுள்ள மின்புத்தகங்கள்:**

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர்

உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

**சமீபத்திய புத்தகங்களை தமிழில் பெறுவது எப்படி?**

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின் கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள்

சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**தமிழிலிருக்கும் எந்த வலைப்பதிவிலிருந்து வேண்டுமானாலும் பதிவுகளை எடுக்கலாமா?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை "யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்" என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது "Creative Commons" எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் "All Rights Reserved" எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் “All Rights Reserved” என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை “Creative Commons” உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை  உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள்  நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு  நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின் சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை

“மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்”-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6” devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

**மேலும் சில பங்களிப்புகள் பின்வருமாறு:**

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை “Creative Commons” உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்

2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்

3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு மின்னஞ்சல் அனுப்பவும்.

**இந்தத் திட்டத்தின் மூலம் பணம் சம்பாதிப்பவர்கள் யார்?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**இத்திட்டத்தால் பதிப்புகளை எழுதிக்கொடுக்கும் ஆசிரியர்/ பதிவருக்கு என்ன லாபம்?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**நகல் எடுப்பதை அனுமதிக்கும் வலைதளங்கள் ஏதேனும் தமிழில் உள்ளதா?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://www.kaniyam.com
5. http://blog.ravidreams.net

**எவ்வாறு ஓர் எழுத்தாளரிடம் CREATIVE COMMONS உரிமத்தின் கீழ் அவரது படைப்புகளை வெளியிடுமாறு கூறுவது?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

**துவக்கம்**

உங்களது வலைத்தளம் அருமை (வலைதளத்தின் பெயர்).

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு

துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை “Creative Commons” உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

**முடிவு**

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் “Creative Commons License”-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**ஓர் எழுத்தாளர் உங்களது உங்களது வேண்டுகோளை மறுக்கும் பட்சத்தில் என்ன செய்வது?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**மின்புத்தகங்கள் எவ்வாறு அமைய வேண்டும்?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத்

தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**தவிர்க்க வேண்டியவைகள் யாவை?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**எங்களைத் தொடர்பு கொள்வது எப்படி?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**இத்திட்டத்தில் ஈடுபட்டுள்ளவர்கள் யார்?**

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

**SUPPORTED BY**

கணியம் அறக்கட்டளை http://kaniyam.com/foundation

# கணியம் அறக்கட்டளை




**தொலை நோக்கு – Vision**

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

**பணி இலக்கு – Mission**

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

## தற்போதைய செயல்கள்

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

## கட்டற்ற மென்பொருட்கள்

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி

- FreeTamilEbooks – ஐஓஎஸ் செயலி
- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்
- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

**அடுத்த திட்டங்கள்/மென்பொருட்கள்**

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்
- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்

- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்

- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

## வெளிப்படைத்தன்மை

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

# நன்கொடை

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**
**Account Number : 606 1010 100 502 79**
**Union Bank Of India**
**West Tambaram, Chennai**
**IFSC – UBIN0560618**
**Account Type : Current Account**

**UPI செயலிகளுக்கான QR Code**



BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**



**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.